முதலாவது ஒரு பெரிய சாம்ராஜ்யத்தினுடைய எழுச்சி அல்லது அந்த சாம்ராஜ்யத்தினுடைய வீழ்ச்சி. இந்த இரண்டு நேரங்களில்தான் பெருங்காப்பியங்கள் தோன்றக்கூடும் என்று சொல்கிறார்கள். அதற்கேற்றபடி உலக இலக்கியங்களில் உதாரணங்களை எடுத்துக்காட்டு கிறார்கள்.

அந்த அடிப்படையை வைத்துக்கொண்டு பார்ப் போமேயானால் சோழ சாம்ராஜ்யம் தொடங்குகின்ற அந்தக் காலத்தில் தோன்றியவன் கம்ப நாடன்.

சோழ சாம்ராஜ்யம் நானூறு ஆண்டுகள் வாழ்ந்து ஒருவாறு மடிகின்ற காலத்தில் தோன்றியவர் (12ஆம் நூற்றாண்டின் கடைப்பகுதி) சேக்கிழார்.

ஆக, சோழ சாம்ராஜ்யத் தொடக்கத்தில் கம்பனும், அதன் வீழ்ச்சியில் சேக்கிழாரும் இரண்டு பெருங் காப்பியங்களை ஆக்கித் தந்திருக்கிறார்கள் என்பதை அறிந்து கொள்ளலாம்.

இனி, சோழ சாம்ராஜ்யம் தொடங்குகின்ற காலம் என்றால் பல்லவ சாம்ராஜ்யத்தின் வீழ்ச்சிக் காலம் என்பதையும் அறிந்து கொள்ள வேண்டும். அப்போது தமிழ்நாட்டின் நிலை எதுவாக இருந்திருக்கும் என்று சிந்திப்போமேயானால் ஒருசில எண்ணங்கள் மனத்தில் ஊசலாடுகின்றன.

சமதர்ம சமுதாயத்தைக் கம்பன் படைத்திருப்பது போல் முன்னும் இல்லை, பின்னும் இல்லை என்று கூறுகிறோம். அதே நேரத்தில் இப்படி ஒரு கற்பனை அவனுடைய மனத்தில் எப்படித் தோன்றிற்று என்று பார்ப்போமேயானால் அன்றைய வரலாற்று நிகழ்ச்சிகள் இதற்கு இடம் தருகின்றன என்று நினைப்பதில் தவறு ஒன்றும் இல்லை.

கம்பனுடைய காலம்— அதாவது ஒன்பதாம் நூற்றாண்டில் சமுதாயம் 'உடையவர்கள், இல்லா

தவர்கள்' என்ற பெரும் பிரிவைக் கொண்டிருந்தது என்பதில் ஐயப்பாடே இல்லை. சங்ககாலம் தொடங்கிப் பன்னிரண்டு, பதின்மூன்றாம் நூற்றாண்டு முடியத் தமிழகத்தில்— உலகத்தில் வேறு எல்லாப் பகுதிகளிலும் இருப்பது போலத்தான் இவ்வேறுபாடு இருந்திருக்கிறது. உடையவர்கள் ஒரு தனிக் கூட்டமாக இருந்திருக்கிறார்கள். இல்லாதவர்கள் ஒரு தனிக் கூட்டமாக இருந்திருக்கிறார்கள். இல்லாதவர்களிலே புலவர்களாக, அறிஞர்களாக இருந்தவர்கள் இந்த உடையவர்களை அண்டி வாழ்ந்திருக்கிறார்கள். உடையவர்களும் ஏதோ அந்தப் பெருஞ் சொத்துக்கும் தாங்கள் உரிமைக்காரர்கள் என்று நினைக்கவில்லை என்று தெரிகிறது.

இன்று மகாத்மா காந்தி சொல்வதுபோலப் பெரும் சொத்துடையவர்கள் அந்தச் சொத்துக்குத் தாங்கள் உரிமையாளர்கள் என்று நினைக்காமல், அதைப் பாதுகாத்துப் பங்கிட வேண்டிய கடப்பாடு உடையவர்கள் என்ற தர்மகர்த்தா முறையில்தான் பழந்தமிழ்ச் செல்வர்கள் வாழ்ந்திருக்கிறார்கள் என்று தெரிகிறது.

கம்பனுடைய காலத்திலும் அப்படித்தான் இருந்திருக்க வேண்டும். கம்பனுடைய வரலாறு நமக்குத் தெரியவில்லை. ஆனால், அதே நேரத்தில் அவன் தன் காலில் நிற்க முடியாதவனாய், அதாவது அவனுடைய குடும்பம் அவனைத் தனிப்பட்ட முறையில் வாழ வைக்க வாய்ப்பு இல்லாததாக இருந்திருக்க வேண்டும் என்று நினைக்க வேண்டியிருக்கிறது. இல்லாவிட்டால் சடையப்ப வள்ளல் என்ற பெரியதொரு பெருமகனை அண்டித் தன் வாழ்நாளைச் செலவிட்டிருக்க வேண்டிய சூழ்நிலை ஏற்பட்டிருக்காது. சடையப்பரைப் பொறுத்தமட்டில் முழுவதும் கம்பனை மகனாகவே ஏற்றுக்கொண்டு அற்புதமாக வளர்த்தான் என்பதில் ஐயப்பாடு இல்லை. அந்த நன்றிப் பெருக்கைக் கடைசிவரை கம்பன் மறக்கவும் இல்லை.

என்னதான் இருந்தாலும் கம்பனுடைய அடிமனத்தில் ஒரோவழி இந்த எண்ணம் தோன்றித்தான் இருத்தல் வேண்டும். 'தன்னுடைய காலில் நிற்க முடியாமல் தன்னுடைய குடும்பத்தார் தன்னைத் தனிப்பட்ட முறையில், சுதந்திரமாக வாழ வைக்க வாய்ப்பு இல்லாத காரணத்தினால்தானே சடையப்பரைப் போன்ற வள்ளலை அண்டியிருக்க வேண்டியிருக்கிறது' என்ற மன நெருடல் ஏற்பட்டிருக்க வேண்டும். இதற்கு அடிப்படைக் காரணம் என்ன? உடையார், இல்லார் என்ற இரண்டு பெரும் பிரிவாகச் சமுதாயம் அமைந்திருந்ததுதான் காரணம்.

இந்த நினைவு ஆழமாகப் பதியப் பதியப் பெரும் கவிஞனாகிய அவன், இந்த உடையார்— இல்லார் என்கிற வேறுபாட்டோடு கூடிய சமுதாயத்தில் வாழும்போதே, 'இதெல்லாம் இல்லாத ஒரு சமுதாயம் இருந்தால் எப்படி இருக்கும்' என்ற கற்பனையில் திளைத்திருக்க வேண்டும். அப்படி அவன் கனவு கண்டதனுடைய விளைவுதான் நாட்டுப் படலத்தில் அவன் அமைத்திருக்கின்ற சமுதாயம். இக்கருத்தோடு கோசல நாட்டைக் கம்பன் எப்படி வருணிக்கிறான் என்று பார்க்கும்போது வியப்பு ஒன்றும் நமக்குத் தோன்றுவதில்லை.

இன்னும் சொல்லப்போனால் வால்மீகி கோசலத்தைப் பற்றி ஒன்றுமே சொல்லவில்லை என்றுதான் சொல்ல வேண்டும்.

**ஆங்கு அவன் புகழ்ந்த நாட்டை**
**அன்பெனும் நறவம் மாந்தி**
**மூங்கையான் பேசலுற்றான் என்ன**
**யான் மொழியல் உற்றேன்**

(கம்பன்— 32)

எனக் கம்பன் தனக்கு மூல நூலாகக் கொண்டதாகக் குறிப்பிடும் வான்மீகத்தில் கோசலம் என்ற பெயர் கூறப் படுவதைத் தவிர வேறு எந்தவிதமான வருணனையையும் வான்மீகி முனிவர் செய்யவில்லை.

அந்த ஒரு சொல்லை மட்டும் வைத்துக்கொண்டு ஒரு புதிய நாட்டைக் கற்பனை செய்கின்றான் கம்பன் என்றால், ஆழமான தூண்டுதல் ஒன்று ஏதேனும் இருந் திருக்க வேண்டும். அந்தத் தூண்டுதல்தான் அவன் சமைக்கக் கருதிய கற்பனைச் சமுதாய அமைப்பை, தமிழர்களுக்கு அறிவுறுத்தியது.

அன்றைய நிலையில் வறுமையுடைய மக்கள் தங்கள் பிள்ளைகளைக்கூட விற்கத் தயாராக இருந்தார்கள் என்பதைப் பெரிய புராணத்திலிருந்து அறிகிறோம். 7ஆம் நூற்றாண்டில் வாழ்ந்த பரஞ்சோதியார்— பின்னர் சிறுத் தொண்டர் என்று புகழ் பெற்ற பெருமகனார்— தம்முடைய மகனை அரிவதற்கு முன்னர் மனைவியிடம் பேசுவதைச் சேக்கிழார் அற்புதமாக எடுத்துக் காட்டு கிறார்.

'மைந்தர் தமை நினைவு நிரம்ப நிதிகொடுத்தால் தருவாருளரே' (சிறுத்தொண்டர் 56) என்று சொல்கிறார். ஆகவே, நிரம்பப் பொருள் கொடுத்தால் தங்கள் பிள்ளைகளை விற்கத் தயாராக இருந்தார்கள் என்று அறிகிறோம்.

இதற்கு முன்னர், வடநாட்டில் வழங்கும் சுனச்சேபன் கதை இதை நன்கு வலியுறுத்துகிறது. நரபலி இடுவதற்காக ஒரு பிள்ளை வேண்டும் என்று அரசன் அம்பரீடன் பெரும் பணத்தை எடுத்துக்கொண்டு பிள்ளை வாங்கப் புறப்படு கிறான். மூன்று பிள்ளைகளையுடைய இரிசிகன் தன் முதல் பிள்ளையையும், அவன் துணைவி தன் கடைசிப் பிள்ளையையும் தாங்கள் வைத்துக்கொண்டு இடையில் நின்ற சுனச்சேபனைப் பொருளுக்கு விற்றுவிட்டார்கள் என்று அறிகிறோம். (கம்பன் 599, 601) ஆகவே,

உடையார் இல்லார் இருக்கிற சமுதாயத்தில் இப்படிப் பட்ட குறைபாடுகள் இருந்துதான் தீரும்.

இவற்றையெல்லாம் மனத்தில் வாங்கிக்கொண்ட கம்பநாடன் இவற்றுக்கு ஒரு முடிவு கட்ட வேண்டும் என்று நினைத்தான் போலும். ஆகவே, தான் பாட எடுத்துக்கொண்ட காப்பியத்தில் கோசல நாட்டில் இப்படி ஒரு கற்பனைச் சமுதாயத்தை அமைத்து, பிரச்சனையே இல்லாத சமுதாயம் என்று காட்ட முற்படுகின்றான்.

அது மட்டுமன்று. இப்படி ஒரு கற்பனை நாட்டைப் பாடுவதன் மூலம் பின்னே வளர்ந்து வருகின்ற சோழப் பேரரசு சமுதாயத்தை அமைக்கும்போது உடையார்— இல்லார் வேறுபாட்டை மிகுதிப்படுத்தாததாய் இருக்க வேண்டும் என்று அவன் கருதியிருத்தல் கூடும்.

அப்படியானால்— அந்தப் பெருங்காப்பியம் ஒரு கலங்கரை விளக்கமாக நின்று சமுதாயம் எப்படி அமைய வேண்டுமென்று மக்களுக்கு எடுத்துச் சொல்லுகின்ற ஆசானாகவும் அமைந்திருக்கிறது. காப்பியத்தினுடைய பல்வேறு பணிகளில் அறிவுறுத்தல், பயிற்றுவித்தல் முதலான கடமைகளும் இருக்கின்ற காரணத்தினால், தன்னுடைய காப்பியத்தின் தொடக்கத்திலேயே இதனைச் சொல்வதன் மூலம் சோழப் பேரரசில் எப்படிச் சமுதாயம் அமைய வேண்டும் என்பதைக் கவிஞன் கற்பனை மூலம் கண்டான் என்று நினைப்பதிலும் தவறு ஒன்றும் இல்லை.

இனி, கோசல நாட்டு மக்கள் மேற்கொண்ட வாழ்க்கை பற்றியும் அவர்களது அரசியல் பற்றியும் அடுத்துக் காணலாம்.

# கோசல அரசியல்

## *மக்கள் நிலை*

கோசல நாட்டு ஆடவரும் பெண்டிரும் பெற்ற கல்வியையும் அக்கல்வியால் பெற்ற பண்பாட்டையும் கண்டோம்.

இப்பண்பாட்டை அடிப்படையிற் கொண்டு அவர்கள் வாழ்ந்த வாழ்க்கையையும், அவர்கள் பெற்றிருந்த அரசியலையும் இனிக் காண்போம். அரசன் மக்களின் பொருட்டு இருக்கிறான். பழந்தமிழ் நாட்டில் அரச உரிமை பரம்பரைச் சொத்தாகவே இருந்து வந்தது. எனினும், அரசன் தன் விருப்பம்போல ஆட்சி செலுத்தாமல், மக்கள் நலம் கருதியே ஆண்டு வந்தான் என்பதை அறிய முடிகிறது.

கோசலநாட்டு மன்னனும் இவ்விதிக்கு விலக்கானவன் அல்லன். அவன் ஆட்சி சிறக்க உதவியவர்கள் அந்நாட்டு மக்களே. மன்னன் எவ்வளவு சிறந்தவனாயினும், மக்கள் மாண்பில்லாதவர்களாய் இருப்பின், அவன் ஆட்சி சிறவாது. எனவே, கம்பநாடன் தான் படைத்த மன்னனைப் பற்றிக் கூறுமுன்னர் அவனால் ஆட்சி செய்யப் பெற்ற மக்களைப் பற்றிக் கூறுகிறான். ''மன்னன் எவ்வழி மன்னுயிர் அவ்வழி,'' என்று கூறும் பழமொழியைத் திருப்பி வைத்துப் பார்த்தாலும் அஃது

உண்மையாகும். மக்கள் சிறந்த வழி மன்னன் சிறப்பதும், அவர்கள் சிறவாத வழி மன்னன் சிறவாமையும் உண்மையே. எனவே, கோசலநாட்டு மக்கள் எத்தகைய மன்னனைப் பெறத் தகுதி வாய்ந்தவர்கள் என்பதைப் பேசுகிறான் கவிஞன்.

## கோபத்தை வென்றோர்

அரசனது தலையாய கடமை நாட்டில் குற்றங் களைதல் என்பார்கள். **'துட்டர்களை அழித்தலும் சிட்டர்களைப் பரிபாலித்தலும் அரசன் கடமைகளுள் தலையாயவை'** எனச் **சுக்கிர நீதி** கூறுகிறது. ஆனால் கோசல நாட்டு மன்னனுக்கு இத்தகைய வேலை இல்லை என்கிறான் கவிஞன். குற்றம் நிகழ்ந்தால் அன்றோ அதனைக் களைய வேண்டும்? இந்நாட்டில் குற்றம் செய்வாரே யாரும் இல்லையாம். நமக்கே கொஞ்சம் வியப்பாக இருக்கிறதன்றோ? 'மக்கள் என்று இருந்தால், குற்றம் செய்யாதவர்களாக இருக்க இயலுமா?' என்று கூடக் கேட்கத் தோன்றுகிறது. இத்தகைய ஐயம் கவிஞனுக்கும் ஏற்பட்டிருக்க வேண்டும். எனவே, அவன் அடுத்த அடியில் இதற்கு விடை கூற முற்படுகிறான். மனிதன் எப்பொழுது குற்றம் செய்கிறான்? அறிவை இழந்த பொழுதுதான் குற்றம் செய்கிறான். அறிவை எப்பொழுது இழக்கிறான்? கோபம் வந்தபொழுதுதான் மனித அறிவு பாழ்படுகிறது. எனவே, **கோபமே மனிதன் குற்றம் செய்யக் காரணமாகிறது** என்ற உண்மையை 'பகவத்கீதை'யுங் கூடப் பறைசாற்றுகிறது[2], ஆகலின், ஒருவன் குற்றம் செய்யாதிருக்கச் சிறந்த வழி கோபப்படாதிருப்பதுதான். கோபம் எப்பொழுது வாராமல் இருக்கும்? மனத்தில் தெளிவு இருக்கும்பொழுது தான் கோபத்தை வாராமல் தடுக்க இயலும். கோபமே

---

2 பகவத்கீதை, 2-ஆம் அத்தியாயம், ஸாங்கிய யோகம், பாடல்— 62, 63

வாராமல் இருப்பது என்பது ஒன்று. வந்த கோபத்தை வெளிக்காட்டாமல் இருப்பது ஒன்று. இவ்விரண்டனுள் இரண்டாவது கூறப்பட்டது சிறப்பில்லாத ஒன்று. அது நம்முள் பலரும் செய்கிற ஒன்று. பெரியவர்கட்குக் கோபமே வாராமல் இருக்க வேண்டும். மனத் தெளிவால் அவர்கள் இதனை நிறைவேற்ற முடிகிறது. கோசல மக்கள் சிந்தையில் தெளிவு பெற்று அதனால் கோபம் வாராமல் காத்துக்கொண்டு, அதன் பயனாகக் குற்றம் என்பதையே செய்யாமல் இருக்கிறார்கள் என்பதைக் கவிஞன் இதோ சுவைபடக் கூறுகிறான்:

**கூற்றம் இல்லைஓர் குற்றம் இலாமையால்;**
**சீற்றம் இல்லைதம் சிந்தையின் செம்மையால்** (70)

குற்றஞ் செய்யாதவர்மேல் கூற்றுவன் செல்வதில்லை என்றமையின், அந்நாட்டு மக்கள் இறப்பதே இல்லை, என்று யாரும் நினைந்துவிட வேண்டா. இறப்பு என்பது தவிர்க்க முடியாத ஒன்று. இங்கே 'கூற்றம்' என்றது அகால மரணத்தையே! 'காலன், கூற்றம்' என்பவை வெவ்வேறு பொருளைக் கொண்ட சொற்கள். கால முடிவிலே உயிர் போவதைக் 'காலன் வாய்ப்பட்டான்'' என்றும், இடைக்கூற்றில் தற்கொலை, தூக்குத் தண்டனை, கொலை முதலியவற்றால் உயிர் போவதைக் 'கூற்றுவன் வாய்ப்பட்டான்' என்றும் சொல்லுவோம். எனவே, அந்நாட்டில் அகாலச் சாவு இல்லை என்றே கொள்ள வேண்டும். அதாவது, அந்த நாட்டில் பழக்க வழக்க ஒழுக்கத்தால் குற்றமிழைத்து அதனால் மீளா நோய்க்காளாகி அகால மரணத்திற்கு ஆளாவதோ, அன்றிச் சமுதாய வாழ்வில் தீய குற்றங்கள் புரிய அதனால் தூக்குத் தண்டனையடைவதோ, அல்லது எவருடனும் கொண்ட பகை காரணமாகக் கொலை செய்யப்படுவதோ இல்லை. காரணம், அந்நாட்டு மக்களின் மனச்செம்மை தான் என்கிறான் கவிஞன். இங்குக் கூறப்பெற்ற

''சிந்தையின் செம்மை' என்பது, வாழ்க்கையில் எத்துணைப் பயன்படக்கூடியது என்பதை நம்முள் ஒவ்வொருவரும் சற்று ஆராய வேண்டும். வாழ்க்கையில் பெற வேண்டிய பேறுகள் அனைத்திலும் தலையாயது சிந்தையின் தெளிவாகும். இது கருதியே போலும் பெரியோர்கள் 'செல்வம் என்பது சிந்தையின் நிறைவு'[3] என்று கூறினார்கள்! இனி அந்தப் பாடலின் பின்னிரண்டு அடிகளைப் பார்க்கலாம்:

**ஆற்ற நல்லறம் அல்லது இலாமையால்**
**ஏற்றம் அல்லது இழிதகவு இல்லையே!**

முன்னிரண்டடிகள் மக்கள் மனத்துச் செம்மையை வெளிப் படுத்தினால், இந்த இரண்டடிகளும் ஆட்சிச் செம்மையை விளக்குகின்றன. அந்நாட்டு மக்கட் பண்பும் ஆட்சிச் சீர்மையும், தீயன புரிய எண்ணிச் செல்வோர்க்குங்கூட அங்கு இடமோ, வாய்ப்போ, வழியோ இல்லாமல், நல்ல செயல்களுக்கே வழி வகுத்து வைத்திருக்கின்றன. எனவே, அந்நாட்டிற்கு நாளுக்கு நாள் 'ஏற்றம்' (உயர்வு) ஏற்படு கிறதே அன்றி ''இழி தகவு'' (மேனின்றவர் தாழ்வது) என்பது சிறிதும் இன்று என்று கவிஞன் கூறுவது எவ்வளவு நயமாய் இருக்கிறது பார்த்தீர்களா!

## கள்வர் இல்லை

இந்நிறைவால் அம்மக்கள் பெற்ற பயனைக் கவிஞன் மேலும் கூற முற்படுகிறான். கோசல நாட்டில் மக்கள் தம்முடைய பொருளைப் பாதுகாத்து வைப்பதுகூட இல்லையாம். ஏன் எனில் அப்பொருளைக் கவர்ந்து கொண்டு போக அவண் ஒருவரும் இல்லை. களவு செய்யும் மனப்பான்மையைத் தடுப்பது அத்துணை எளிதன்று.

---

3 குமரகுருபர அடிகளார்; சிதம்பர மும்மணிக் கோவை. பிரபந்தத் திரட்டு, 476.

'இதனை வென்றவர்களைப் போற்றத்தான் வேண்டும். இதனாலேயே போலும் **கள்ளாமை** என்ற அதிகாரத்தை வள்ளுவப் பெருந்தகையார் **துறவற இயலில்** வைத்துப் போனார்! துறந்தேமென்று கூறுவாரும் துறத்தற்கரிய ஒரு மனப்பான்மை போலும் இது! எனவே, கோசல மக்களிடம் இப்பண்பைக் கவிஞன் கூறும்பொழுது நாம் வியப்படையத்தான் வேண்டியிருக்கிறது.

> **கள்வார் இலாமைப் பொருள்காவலும் இல்லை; யாதும்**
> **கொள்வார் இலாமைக் கொடுப்பார்களும் இல்லை மாதோ!**
> (165)

என்று கவிஞன் கூறுகையில் இன்னும் ஒருபடி மேலே சென்று விடுகிறான்.

களவு மனப்பான்மை இல்லாதிருப்பதற்குரிய காரணமும் நன்கு விளங்குகிறது நான்காம் அடியினால். மக்கள் பண்பு எத்துணை உயர்ந்ததாயினும், வறுமை மிக்க வழியும் பசி மிகுந்த வழியும் பண்பாடு விடை பெற்றுக்கொள்ளும். எனவே, இவை இரண்டும் அங்கில்லை என்று கூறுமுகத்தான் தனது கூற்றை நிலை நாட்டுகிறான் கவிஞன். இல்லார் யாரும் இல்லை என்று கூறியதால், பசிப்பிணி இன்றியும் பிறர் பொருளை விரும்புபவர் உண்டு ஆகலின், அத்தகையோரும் இல்லை என்பதை விளக்க, 'கொடுப்பார்களும் இல்லை; ஏன் எனில், கொள்வார் இல்லாத காரணத்தால்' என்று நான்காம் அடியில் அழகாகக் கூறிவிட்டான்.

வறுமையும் பசியும் இல்லாமல் இருந்ததாகப் பறை சாற்றிய ரஷியா போன்ற நாடுகளிற்கூட, அனைவரும் எல்லாச் செல்வமும் பெற்றிருந்தார்கள் என்று கூறுவதற் கில்லை. பெருஞ்செல்வமும் பெரிய அதிகாரமும் படைத்த ஆட்சியாளரும், ஆகாரத்தைத் தவிர வேறு வசதியற்ற ஆளப்படுவோரும் அந்நாட்டில் உண்டு என்பதை நா

அறிவோம். இதனாலேயே அந்நாட்டில் அடிக்கடி போராட்டங்கள் ஏற்படுவதைப் பற்றிக் கேள்விப்படு கிறோம். ஆனால், இத்தகைய குறைபாடுகூடத் தான் கண்ட கனவு நாட்டில் இல்லை எனக் கவிஞன் கூறுகிறான்.

**எல்லாரும் எல்லாப் பெருஞ்செல்வமும் எய்த லாலே**
**இல்லாரும் இல்லை உடையார்களும் இல்லை மாதோ!** *(166)*

என்ற இப்பாடலில் அனுபவப் பொருளாகிய பெருஞ் செல்வத்தை அனைவரும் ஒருசேரப் பெற்றிருந்தனர் என்பதும், எனவே பிறர் பொருளை விரும்புவார் யாரும் இல்லை என்பதும் நன்கு விளங்குவது காண்க. எத்துணைச் செல்வம் பெற்றிருப்பினும், மனநிறைவு இல்லாதவர்களும் உண்டு. அத்தகையார் இந்நாட்டில் இல்லை என்பதை முன்னரே குறித்துவிட்டான் கவிஞன்.

இனி அடுத்துக் காண வேண்டுவது, இந்நாட்டின் அரசனைப் பற்றியதாகும். கோசலநாட்டு அரசியல் பரம்பரையாய் வந்த ஒன்று என்பது, முன்னரே குறிக்கப் பெற்றது. பரம்பரையாய் வரும் இதில் நன்மையும், தீமையும் உண்டு. அரசியல் நுணுக்கங்களை அறிந் திருக்கும் வாய்ப்புப் பரம்பரை அரசியலில் உண்டு. 'மகன் அறிவு தந்தை அறிவு'[4] என்ற **நாலடியார்** முதுமொழி இதற்கு நல்ல சான்று பகர்கிறது. ஆனால், தந்தைக்குப் பிறகு மைந்தனுக்கு அரசுரிமை வந்தே தீரும் என்ற கட்டுப்பாடு ஒரோவழித் தீமை பயத்தலும் உண்டு. எப்படியும் இச்செல்வம் தம்மை அடைந்தே தீரும் என்ற உறுதி காரணமாக அஞ்சாமல் தவறு செய்ய முற்படுபவரும் உண்டு அல்லவா? எனவே இங்குக் கூறப்பெற்ற குற்றத்தை நீக்கிக் குணத்தை மட்டும் மேற்கொண்டு அரசியல் அமைந்

---

4 நாலடியார் 367.

திருந்தது என்று கூறுகிறான் கம்பநாடன். இது எவ்வாறு என்பது பற்றிப் பின்னர்க் காண்போம்.

நாட்டை ஆளும் மன்னன் செய்ய வேண்டிய இன்றியமையாக் கடப்பாடுகள் சில உண்டு. அவற்றை வரிசைப் படுத்துகிறான் கவிஞன்.

**முறைஅறிந்து அவாவை நீக்கி முனிவுழி முனிந்து வெஃகும்**
**இறைஅறிந்து உயிர்க்கு நல்கும் இசைகெழு வேந்தன்...** (50)

[மரபையும் வரி வாங்கும் நீதியையும் அறிந்து, வரிப் பணம் என்று பேராசையுடன் சேகரிக்காமல், கோபிக்கும் நேரத்தில் கோபித்து, உயிர்கட்கு இரங்கும் புகழ் பெற்ற மன்னன்.]

## அரசன் கடமை

நீதியாகிய சட்டத்தை அரசன் நன்கு அறிந்திருத்தல் மிக இன்றியமையாததாகும். சட்டத்தினும் மேற்பட்ட ஒன்று 'மரபு' எனப்படுவது. ஒரு நாட்டில் ஒரு காலத்தில் ஏற்பட்ட சட்டம், அதே நாட்டுக்குக் கூடச் சில காலம் கழித்துப் பயன்படும் என்று கூறுவதற்கில்லை. அவ்வாறாயின், ஒரு நாட்டுச் சட்டம் பிறிதொரு நாட்டுக்கும் ஏற்றதாகும் என்று கூறுவதைக் காட்டிலும் அறியாமை வேறு இல்லை. அந்த அந்த நாட்டின் மரபுகளை அரசன் நன்கு அறிந்திருக்க வேண்டும் என்பதை வலியுறுத்த வந்த கவிஞன், **'முறை அறிந்து'** என்று கூறுகிறான். இம்மரபை அறிந்து இதன் வழி வாழாமல் தடுப்பது ஒருவனுடைய அவா அல்லது ஆசையாகும். தன்னைப் பற்றியும் தனது நலத்தைப் பற்றியும் ஓயாது நினைப்பவன், பிறர் பொருட்டு வாழ முடியாததாகலின், **அவாவை நீக்கி** என்று கவிஞன் அடுத்துக் கூறினான். இனிக்

கோபம் என்பது தனி மனிதனுக்குத் தீங்கிழைக்கக்கூடிய ஒன்று. "சினம் என்னும் சேர்ந்தாரைக் கொல்லி" (306) என்றார் வள்ளுவப் பெருந்தகையார். இந்தச் சினங்கூடச் சில சமயங்களில் வேண்டப்படுவதாகும். பலருடைய நலனைக் கருத வேண்டிய அரசன், அப்பலர் நலத்திற்குக் கேடு செய்யும் சிலரைக் கோபிக்கத்தான் வேண்டி வரும். ஆகவே, 'முனிவுழி முனிந்து' என்று கூறினான். இவை அனைத்தையும் நன்கு செய்யும் அரசன்கூடப் பொருளாசை காரணமாகப் பிறருக்குத் தீங்கிழைத்து விடுதல் கூடும். பொருளாசை அவ்வளவு எளிதில் விடக்கூடிய ஒன்றன்று. எனவே, கவிஞன், "வெஃகும் இறை அறிந்து" என்று கூறினான். அரசன் எவ்வளவு வரிப்பணம் வாங்க வேண்டும் என்பது பற்றி இன்றுகூடத் திட்டமான முடிவு ஒன்றும் இல்லை. மக்களுடைய கொடுக்கும் சக்தி, அரசனுடைய செலவிடும் வழிகள், கால நிலை, சூழ்நிலை என்ற இவற்றை ஒட்டி மாறுபடும் இயல்புடையது வரி அளவு. எனவே, இவற்றையெல்லாம் உள்ளடக்கிக் கவிஞன் "வெஃகும் இறை அறிந்து" என்று கூறிப் போனான்.

இந்த இடத்தில் அரசன் தன்மையைப் பற்றிக் கவிஞன் கிட்கிந்தா காண்டத்தில் அரசியற் படலம் 14ஆம் பாட்டில் கூறுவதை ஒப்பு நோக்கிக் கற்பது பயனுடையதாகும்.

**நாயகன் அல்லன்; நம்மை**
**நனிபயந்து எடுத்து நல்கும்**
**'தாய்'என இனிது பேணித்**
**தாங்குதி தாங்கு வோரை!**
**ஆயது தன்மை ஏனும்**
**அறவரம்பு இகவா வண்ணம்**
**தீயது வந்த போது**
**சுடுதியால் தீமை யோரை!**

அரசன் தான் ஒரு தலைவன் என்று கருதப்படக்கூடியவனாய் இருந்துவிடக்கூடாது. 'ஈன்றெடுத்து ஊட்டி வளர்க்கும் தாய் இவன்' எனக் கருதும்படி அன்பு நிறைந்தவனாக மக்களைப் பரிபாலிக்க வேண்டும். இதுதான் முறை என்றாலும், குற்றம் நேர்ந்த இடத்துக் குற்றம் புரிந்தோரை அறத்தினது எல்லை கடவாதபடி தண்டிக்கத் தயங்கக்கூடாது. அன்பு நிரம்பியவர் எனினும், அறத்தாறு செல்லவே அருங்கடன் அரசர்க்கு என்பதை நன்றாகப் புலப்படுத்துகிறான் கவிஞன்!

இத்துணைச் சிறப்பும் உடையானே அரசன் என்று மட்டும் கம்பநாடன் கூறியிருப்பானேயாகில், அவன் ஒரு சிறந்த அரசனைப் பற்றி மட்டும் கூறினவனாவானே தவிரத் தான் படைத்த கனவு நாட்டின் ஒப்பற்ற அரசனைப் பற்றிக் கூறினவன் ஆகமாட்டான். எனவே, அவன் கூறும் தனிச் சிறப்புடைய அரசனைப் பற்றிக் காண்போம்:

இவ்வொப்பற்ற மன்னன் குடிகளுக்கு எவ்வாறு பயன்பட்டான் என்பதைக் கூற வந்த கவிஞன்,

**தாய்ஒக்கும் அன்பில்; தவம்ஒக்கும் நலம்ப யப்பில்;**
**சேய்ஒக்கும் முன்னின்று ஒருசெல்கதி உய்க்கும் நீரால்;**
**நோய்ஒக்கும் என்னின் மருந்துஒக்கும்; நுணங்கு கேள்வி**
**ஆயப்புகுங்கால் அறிவொக்கும் எவர்க்கும் அன்னான்.** *(171)*

'குடிகளிடம் கைம்மாறு கருதாமல் அன்பு செலுத்தலினாலும், அவர்கள் கேளாமலும் அவர்கட்கு வேண்டுவனவற்றைச் செய்தலினாலும் தாயாய் உள்ளான்; குடிகள் செய்த தவமாவான் அவர்க்கு நலஞ்செய்வதில்; அவர்களை முன்னின்று செலுத்தலின் மகன் போல்வான்; குற்றம் உடையாரைத் தண்டித்தலால் நோயாவான்; தண்ணளி செய்தலின் மருந்து போல்வான்; அரசியல் தொடர்புள்ள

வற்றையும் பிறவற்றையும் ஆராயும்பொழுது அறிவு போல்வான்' என்று கூறுமுகத்தான் சிறந்த அரசனுக்குரிய பண்பாடுகள் அனைத்தையுங் கூறி விட்டான். இத்தகைய அரசனை மக்கள் எவ்வாறு விரும்பினார்கள் என்பதை அறிய வேண்டாவா? அதற்கும் விடை கூற முற்படுகிறான் கவிஞன்.

## மன்னனே இறைவன்

அரசனைக் குடிகட்குத் தாய் என்று கவிஞன் கூறியது எத்துணைப் பொருத்தம் உடையது என்பதை ஆய்ந்து பார்த்தல் வேண்டும். அடைமொழி தாராமல் கூறி விட்டாலும், தலையாய தாய்மாரை மனத்துட்கொண்டே கவிஞன் கூறுகிறான். 'பால் நினைந்து ஊட்டுபவள்' அல்லளோ தலையாய தாய்? குழந்தை பசித்து அழுத பிறகு பால் தருபவள் இடைப்பட்டவள் அல்லளோ? தன் குடிமக்கட்கு வேண்டும் நலத்தை அவர் வாய்விட்டுக் கேட்குமுன்னரே செய்கிறான் கோசல நாட்டு மன்னன். அதுவும், சமயமறிந்து, அந்தச் சமயத்திற்கு வேண்டும் நன்மையின் திறம் அறிந்து செய்கிறானாம். இவ்வாறு செய்வதை அம்மன்னன், தான் மன்னவனாய்ப் பிறந்து விட்டமையின் தன் கடமை என்று நினைந்து செய்ய வில்லை; உள்அன்போடு செய்கிறான். அதிலும், ஒரு பொழுது ஒரு நன்மையைக் குடிமக்கட்குச் செய்துவிட்டுப் பின்னர் என்ன பயனை எதிர்பார்க்கலாம் என்று நினைப்பவர் உண்டு. கைம்மாறு கருதிச் செய்யப்படும் ஒரு நலம் நல்லதேயாயினும், சிறந்தது என்று கூறுவதற் கில்லை. எனவே, கோசல மன்னன் அன்பு, கைம்மாறு கருதாத அன்பு, என்பதை வெளிப்படையாகக் கூறாமல், 'தாய் அன்பு' என்றுமட்டும் கவிஞன் கூறிவிட்டான். அடுத்து, "தவம் ஒக்கும் நலம் பயப்பில்," என்றான். குடிகள் விரும்பினாலும், சிலவற்றை உடன் செய்தல்

ஆகாது. அதே செயலைச் சில நாள் கழித்துச் செய்தால் பெருநன்மை விளையலாம். இதனை அவர்கள் அந்த நேரத்தில் அறியார்களாயினும், பின்னர் அறிய முடியும். தவம், செய்தவனுக்குத் தப்பாமற்சென்று பயன் தருமேனும், அவன் விரும்பிய நேரத்தில் வருவதில்லை. எனவே, தசரதன் காலமறிந்து உதவி செய்தலின் "தவம் ஒக்கும்," என்று கூறப்பட்டான்.

பிள்ளைகளைப் பற்றிக் கூற வந்தான் ஒரு கவிஞன். "இந்த உலகத்திலும் இசையொடு வாழ்ந்து மறு உலகத்திலும் இடம் பெறுவார் யார் எனில் பகைவரும் கண்டு விரும்பத்தக்க குற்றமற்ற நல்ல பண்பாட்டை உடைய குழந்தைகளைப் பெற்றவரே," என்னும் கருத்துப்பட,

**இம்மை உலகத்து இசையொடும் விளங்கி**
**மறுமை உலகமும் மறுஇன்று எய்துப**
**செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்**
**சிறுவர்ப் பயந்த செம்ம லோரே**

(அகநானூறு, 66)

எனப் பாடினான். எனவே, கோசல மக்கள் இம்மையிலும் புகழுடன் வாழ்ந்து, மறுமை இன்பமும் விடாமற் பெறப் பேருதவி செய்கிறான் அம்மன்னன் எனில், அம்மன்னன் அவர்கட்கு மகன் போன்றுள்ளான் என்று கவி கூறுவதில் தவறில்லை அன்றோ? மகன் போலவும் தாய் போலவும் மட்டும் இருந்துவிட்டால் மன்னன் கடமை முற்றுப் பெற்றுவிடுமா? எனவே அவன் கடமையை நிறைவேற்றும் பொழுது நோயாகவும் காட்சி அளிக்கிறான். உடம்பில் நோய் எப்பொழுது வருகிறது? ஏன் வருகிறது? தகாத செயலைச் செய்தால் நோய் வருவது உறுதி. உண்ட உணவு சீரணியாமல் இருக்கவும், மேலும் உண்டால் தவறு அன்றோ? அப்பொழுது அசீரணமாய் நோய் வருகிறது. அந்நோய் கண்ட பொழுது யாரும் உண்ண

மாட்டார்; பட்டினி கிடப்பர். அந்த நிலையில் நோய் தானாகவே நீங்கிவிடும். எனவே அசீரணமாகிய நோய் வரும் பொழுது துன்பம் போலக் காணப்படினும், பிறகு நன்மையையே செய்கிறது. அதேபோலக் குற்றம் செய்தவர்களை மன்னன் தண்டிக்கிறான்; ஆனால், அவர் கட்குக் கொடுமை செய்யவேண்டும் என்ற நோக்கத்தால் அன்று; அவர்களைத் திருத்திப் பணி கொள்ளும் நோக்குடனேயே தண்டனை அளிக்கிறான். எனவே, தண்டனை தரும் பொழுது அது கொடுமை உடையதாகக் காணப்படினும், பின்னர் நன்மை விளைக்கவே பயன் படுகிறது. ஆதலின், 'நோய் ஒக்கும்' என்றான் கவிஞன்; அடுத்து 'மருந்து ஒக்கும்' என்றும் கூறுவதால் நாட்டிற்கு நன்மை தருவது எனில், அந்த நேரத்தில் மக்கள் அதை விரும்பாவிடினும் அவன் செய்யத் தவறுவதில்லை என்ற குறிப்பைப் பெற வைக்கிறான். மருந்து உண்ணும் பொழுது கடுங்கசப்பாய் இருப்பினும், பின்னர் நன்மை விளைப்பது போல, அவனும் மக்கள் அந்த நேரத்தில் விரும்பவில்லை எனினும், பிற்பயத்தல் கருதி நலம் செய்கிறான் என்றான். இறுதியாக, 'நுணங்கு கேள்வி ஆயப்புகுங்கால் அறிவு ஒக்கும்' என்று கூறியது மிகச் சிறந்ததாகும். நுட்பமான பொருள்களையும், பிறர் வாயிலாய்க் கேட்ட செய்திகளையும் ஆராயும்போது இன்றியமையாதது எது? மனிதன் விலங்கு இனத்திலிருந்து வேறாகப் பிரிக்கப்படுவது எதனால்? ஆராயும் அறிவாலே தான் அன்றோ? அந்த அறிவாய் விளங்குகிறானாம் அம்மன்னன்.

கம்பநாடன் காலமாகிய ஒன்பதாம் நூற்றாண்டிற்குப் பின்னரும் தமிழ் நாட்டில் முடியாட்சிதான் நிலைபெற்று இருந்தது; முடியாட்சியிலும் பரம்பரையாய் அரசுரிமை இறங்கி வரும் முடியாட்சியே நிலைபெற்றிருந்தது. ஆகலின், மன்னனைப் பொறுத்தவரை அவன் முழுவன்மை பெற்ற கடவுளாகவே மதிக்கப் பெற்று வந்தான்.

**புறநானூறு, பதிற்றுப்பத்து** முதலிய சங்க இலக்கியங்களைக் கற்பவர், தமிழ் மன்னர்கள் எவ்வாறு தமிழர்களால் மதிக்கப் பெற்று வந்தார்கள் என்பதை அறிய முடியும், **கரிகாற் பெருவளத்தான்** என்ற பேரரசனின் வன்மையை இதோ **கடியலூர் உருத்திரங்கண்ணனார்** என்ற புலவர் **'பட்டினப்பாலை'** என்ற பாடலில் பாடுகிறார், அம்மன்னன் போர்த்திறம் காணுங்கள்:

**பைங்கிளி மிழற்றும் பாலார் செழுநகர்**
**தொடுதோல் அடியர் துடிபடக் குழீஇக்**
**கொடுவில் எயினர் கொள்ளை உண்ட**
**உணவில் வறுங்கூட்டு உள்ளகத் திருந்து**
**வளைவாய்க் கூகை நண்பகல் குழறவும்**
**அருங்கடி வைப்பின் ஆர்கவின் அழியப்**
**பெரும்பாழ் செய்தும் அமையான் மருங்குஅற**
**மலைஅகழ்க் குவனே கடல்தூர்க் குவனே**
**வான்வீழ்க் குவனே.**

(பட்டினப்பாலை, அடி, 264-272)

[பசிய கிளிகள் தங்கியிருக்கும் அரிய ஊரில் காலில் செருப்பணிந்த வீரர்கள் புகுந்து நெற்கூடுகளைக் கொள்ளை இட்டுவிட, அந்த நெல்லற்ற காலிக்கூடுகளில் கோட்டான்கள் தங்கி நடுப்பகலிலும் கூவும்படி ஊரைப் பாழடித்தும் மனம் அமைதி அடையாதவனாகி மலையைப் பறிப்பான்; கடலைத் தூர்ப்பான்; வானையும் வீழ்த்துவான்.]

இதில் உயர்வு நவிற்சியணி இருப்பினும், பண்டைத் தமிழ் மக்கள் மன்னனுடைய வன்மை பற்றி யாது கருதினார்கள் என்பதற்கு இப்பாடல் தக்கதோர் எடுத்துக் காட்டாகும். இவ்வாறு வன்மையும் படைவலிமையும் உடையவர்களாய் இவ்வரசர்கள் இருந்தமையின்,

இவர்கள் நல்வழி ஒழுகவேண்டிய கடப்பாடும் மிகுதியாயிற்று. பலமில்லாத அரசன் தவறான வழியில் சென்றால், அதனால் தீங்கடைபவர் ஒரு சிலரேயாவர். ஆனால் எல்லாவித வன்மையும் படைத்த அரசன் குடிகள் பொருட்டுத்தான் அரசாள வேண்டும் என்று நினைக்கவில்லையாயின் அதனால் விளையுங் கேடும் எல்லையற்றதாய் முடியும், இது கருதியே ஒரு புலவர் அரசன் ஒருவனுக்கு அறிவுரை வழங்க முற்படுகிறார்.

**நெல்லும் உயிர்அன்றே, நீரும் உயிர்அன்றே;**
**மன்னன் உயிர்த்தே மலர்தலை உலகம்;**
**அதனால்,**
**யான்உயிர் என்பது அறிகை**
**வேல்மிகு தானை வேந்தற்குக் கடனே**

(புறம், 186)

என்ற இப்பாடலில் இரண்டு உண்மைகளை ஆசிரியர் குறித்துள்ளார். ஒன்று, அரசன் மக்களுக்கு உயிர் போன்றவன் என்பது; இரண்டாவது, அவ்வாறு உணர வேண்டிய கடப்பாடு சாதாரண அரசனுக்கன்று; நல்ல படை வன்மை படைத்தவனுக்கே என்பது. இவற்றுள் முதலாவதை எடுத்துக் கொள்வோம். அரசன் மக்கட்கு உயிர் போன்றவன் என்பதை வெற்று உவமையாக மட்டும் எடுத்துக் கொள்ளலாகாது. உடம்பைக் காட்டிலும் உயிர் சிறப்புடையதென்பதை யாவரும் அறிவர். அதே கருத்தைத்தான் ஆசிரியர் இங்கும் பேசுகிறார். சாதாரண மக்களைக் காட்டிலும் அரசன் சிறந்தவன். உயிரின் விருப்பம் போல உடம்பு இயங்கும் இயல்புடையது. அதே போன்று அரசன் விருப்பம் போலக் குடிகள் நடக்கக் கடமைப்பட்டவர்கள் என்ற உண்மை நினைவில் இருத்த வேண்டுவது.

### சங்க காலத்துக்குப் பின்

மன்னனுக்குரிய இத் தனிச் சிறப்பு சங்க காலத்தி லிருந்த தமிழ் மக்களால் ஒப்புக்கொள்ளப் பெற்ற ஒன்றாகும். இன்னும் பிற்காலத்திலும் இக்கருத்தே தமிழ் நாட்டில் நிலவி வந்தது என்பதற்குப் பின்னர்த் தோன்றிய இலக்கியங்கள் சான்று பகர்கின்றன. **"மன்பதை காக்கும் நன்குடி"** (காட்சிக் காதை, 103) என்று **சிலப்பதிகாரம்** பேசு கின்றது. பத்தாம் நூற்றாண்டினதாய **'சீவக சிந்தாமணி'** இக்கருத்தை,

> **உறங்கு மாயினும் மன்னவன் தண்ஒளி**
> **கறங்கு தெண்திரை வையகம் காக்குமால்** (248)

என்றே கூறிச் செல்கிறது; 'உடல் இளைப்பாறும்பொழுது உயிர் உறங்காமல் இருந்து உடலைக் காக்குமாறு போல அரசன் குடிகளைக் காண்கிறான்; அவனுடைய ஆணை காக்கிறது' என்பதே இப்பாடலின் பொருள்.

அடுத்துப் பன்னிரண்டாம் நூற்றாண்டில் தோன்றிய பெரிய புராணமும்,

> **மண்ணில் வாழ்தரு மன்னுயிர் கட்குஎலாம்**
> **கண்ணும் ஆவியும் ஆம்பெருங் காவலன்**
> (திருநகரச்சிறப்பு, 14)

என்றே கூறுகிறது. மக்கள் பொருட்டு ஆட்சி செலுத்தும் ஒரு மனிதனை அவர்கள் விருப்பின் வண்ணம் ஆளுபவன் என்று கருதாமலும், கூறாமலும், அதற்கு மறுதலையாக அவர்கள் தலைவன் என்றும் உயிர் என்றும் கண் என்றும் கூறுவது அக்காலத்தில் தமிழர் தம்முடைய அரசனை எவ்வாறு கருதினர் என்பதை நமக்கு வலியுறுத்துகிறது. இம்மட்டோ? ஒரு நாடு அரசன் இல்லாமல் வாழ

முடியாது என்றுகூட அன்றைத் தமிழர் நினைத்தனர். சங்கப் புலவராய **பரணர்**, தம் காலத்தில் ஒரு காட்சியைக் காண்கிறார். **சேரமான் குடக்கோ நெடுஞ்சேரலாதன்** என்ற சேர மன்னனும், **வேற்பஃறடக்கைப் பெருவிறற்கிள்ளி** என்ற சோழனும் தம்முள் சண்டையிட்டு இருவருமே போர்க்களத்தில் இறந்துவிடுகின்றனர். போரிடுபவர்கள் இறந்து படுதல் இயற்கைதான். எனினும், புலவராய பரணர், இவ்வரசர்களை இழந்த இவர்களுடைய நாடுகள் எவ்வாறு வருந்தும் என நினைந்து அந்நாட்டுக்காகத் தாம் வருந்துகிறார்.

> **சாந்தமை மார்பில் நெடுவேல் பாய்ந்தென**
> **வேந்தரும் பொருதுகளத்து ஒழிந்தனர்; இனியே**
> **என்னா வதுகொல் தானே கழனி!**
> ....................................
> **யாணர் அறாஅ வைப்பில்**
> **காமர் கிடக்கைஅவர் அகன்றலை நாடே!**
>
> (புறம், 63)

அரசன் இறந்துபடின் நாடு வருந்தும் என்று நினைப்பது, அவனை உயிர் என்று கருதும் கருத்துக்கு இசையவே அமைந்துள்ளது. சங்ககாலத்தில் காணப்படும் இதே கருத்து, சேக்கிழார் பெருமானாலும் வலியுறுத்தப் பெறுகிறது.

> **மன்னனை இன்றி வைகும் மண்ணுலகு எண்ணும் காலை**
> **இன்னுயிர் இன்றி வைகும் யாக்கையை ஒக்கும் என்பார்**

என்று அப்பெருமான் **மூர்த்தி நாயனார்** புராணத்தில் (29) பாடுகிறார். ஒரு பாத்திரத்தின் கூற்றாக இவ்வடிகள் அமைந்திருப்பினும், சோழப் பேரரசின் முதலமைச்சர் இவ்வாறே கருதியிருப்பார் என்று நினைப்பதில் தவறு

இல்லை. சேக்கிழாருக்கு முற்பட்டுச் சங்க காலத்திற்குப் பிற்பட்டு வந்த **நம்மாழ்வாரும்** "திருவுடை மன்னரைக் காணின் திருமாலைக் கண்டேனே என்னும்," (திருவாய் மொழி, 4-ஆம் பத்து; 7-ஆம் பாடல்) என்று பாடுகிறார். ஆகலின், தமிழர் கருத்தேயாகும் இது என்பதில் தடை இல்லை.

## கம்பன் புரட்சி

சங்ககாலத்தில் தொடங்கிப் பிறழாது வரும் இக்கொள்கை, முதன் முதலாகக் கம்பநாடனால் உடைத்து ஒதுக்கப்படுகிறது. இன்று நம்முட் பலராலும் மகிழ்ந்து ஏற்றுக் கொள்ளப்படும் 'குடியாட்சி'க்கு அவனால் வித்திடப்படுகிறது. 'குடியாட்சி' என்ற சொல்லை, அவன் பயன்படுத்தவில்லை என்பது உண்மையே. ஆனால், குடியாட்சியின் உட்பொருளை நன்கு அறிந்து அதனை அவன் கூறுகிறான். மக்கள் ஆட்சியில் உள்ளதாகப் பறை சாற்றப்படும் மாண்புதான் என்ன? இத்தகைய ஆட்சியில் 'அரசன்' என்ற பெயரில்லாமல் 'தலைவன்' என்ற பெயரில் ஒரு தலைவன் உண்டு. அற்றைநாள் அரசனுக்குரிய அனைத்து அதிகாரங்களும் இக்குடியாட்சியில் உள்ள தலைவனுக்கும் உண்டு. அவ்வாறாயின் இருவருக்கும் வேற்றுமையே இல்லையா? இருக்கத்தான் செய்கிறது. எந்த மக்களைப் பழைய கால மன்னன் ஆட்சி செய்தானோ, அந்த மக்கள் அந்த மன்னனை விரும்பினாற்கூட நீக்கவியலாது. அவனாக இறந்தால் ஒழிய, அவன் செங்கோலனாயினும், கொடுங் கோலனாயினும், அம்மக்கட்கு விடுதலை இல்லை. ஆனால், இற்றை நாள் குடியாட்சித் தலைவன் இவ்வாறு அமைந்தவன் அல்லன். மக்கள் விரும்புகிற வரை அவன் தலைவன்; விரும்பாவிடில், அவனை அப்பதவியினின்று மக்கள் நீக்கிவிடலாம். இதுவே, அடிப்படையில் இருவருக்கும் உள்ள வேற்றுமை. மக்கள் விரும்புகிற வரை

தான் அரசனாக ஒருவன் இருந்தான் என்றால், அவனை மக்கட்கு உயிர் என்று எவ்வாறு கூற முடியும்? உடம்பு விரும்புவதை உயிர் செய்வதில்லையன்றோ? உயிர் விரும்புவதையன்றோ உடம்பு செய்கிறது!

எனவே, மக்கள் விருப்பப்படி மன்னன் இருக்கிறான் என்றால், அவனை உடம்பு என்று கூறி, அவனால் ஆளப் படும் மக்களை உயிர் என்று கூறுவதுதான் முறையாகும்.

இம்மாதிரி பல காலமாகக் கூறப்பட்டு வந்த உவமையை மாற்றிவிடுவதால் கம்பநாடன் அரசியல் உலகில் ஒரு பெரும் புரட்சியைச் செய்துவிடுகிறான்.

வழக்கமாக மன்னனை உயிர் என்றும் மக்களை உடல் என்றும் உருவகித்த முறையை மாற்றி, ஆணையிடும் உயிராக மக்களையும், ஆணையின் வண்ணம் ஒழுகும் உடம்பாக மன்னனையும் ஆக்கிய பெருமை கம்பநாடனுக்கே உரியது.

அதிலும், பெரிய சக்கரவர்த்தியாகிய தசரதனை அல்லவா இப்படி வெற்றுடம்பாகச் செய்துவிட்டான் கம்பன்!

**வயிரவான் பூண் அணி மடங்கல் மொய்ம்பினான்**
**உயிர்எலாம் தன்னுயிர் ஒப்ப ஓம்பலால்**
**செயிர் இலா உலகினில் சென்று நின்றுவாழ்**
**உயிர்எலாம் உறைவதோர் உடம்பும் ஆயினான்** *(177)*

தசரதனை உடம்பாக உருவகித்தது மட்டுமல்லாமல், அவ்வுடம்புக்குக் கட்டளையிடும் உயிர்களாக அக்கவிஞன் கூறியவை மக்களுடைய உயிர்கள் மட்டுமல்ல; ''சென்று நின்று வாழ்உயிர் எலாம்'' என்று கூறியதால், அஃறிணை உயர்திணை ஆகிய இருவகை உயிர்களையும் தசரதனை ஆட்டிப்படைக்கும் உயிர்களாகக் கூறிவிட்டான். இந்தக்

கருத்தை மேலும் வலியுறுத்த வேண்டி இன்னும் விளக்க மாக அயோத்தியா காண்டத்தில்,

> **வையம் மன்னுயி ராகஅம் மன்னுயிர்**
> **உய்யத் தாங்கும் உடல்அன்ன மன்னவன்** *(1423)*

என்று தெளிவுறுத்துதல் ஒப்பிட்டு உணர வேண்டுவ தாகும். இவ்வாறு கூறுவதால், 'மக்கள் விருப்பம்போல ஆட்சி செய்தான்', என்பதும் பெற்றாம். மேலும், குறிப்பாக, அவர்கள் விரும்பியதாலேயே அரசனாய் இருக்கவியன்றது என்பதும் பெற்றாம்.

அரசியல் அமைப்புக்களைக்கூடக் கவிஞன் தனது **'தீர்க்கதரிசனத்'** தன்மையால் *Prophetic power* பன்னூறு ஆண்டுகட்கு முன்னரே காண முடிகிறது என்ற கொள்கைக்குக் கம்பநாடனுடைய இந்த இரண்டு அடிகள் நல்ல சான்றாகும்.

# இலட்சிய நாடும் நகரமும்

தமிழ் இலக்கியத்தைப் பொறுத்தவரை நாடு, நகரம் பற்றிய வருணனைகள் மிகுதியாக உள்ளன. சங்கப் பாடல்களில் மதுரைக் காஞ்சி, பட்டினப் பாலை என்னும் இரண்டும் நகர வருணனையை உயர்வு நவிற்சியோடு மிகச் சிறப்பாகக் கூறுகின்றன.

இவை முறையே மதுரையையும் காவிரிப்பூம் பட்டினத்தையும் பாட எழுந்தவை. இந்த ஊர்களை விரிவாக வருணிப்பதற்கு முன்னர் இவ்வூர்களைச் சுற்றி யுள்ள இடங்களையும் ஓரளவு விவரித்துள்ளன.

இவற்றுள் நாடு, நகர் என்று எடுத்துக்கொண்டு தனிப் பட்ட நாடாக ஒரு பகுதியைப் பிரித்து, வருணிப்பதற்கு உதிரிப் பாடல்களான சங்கப் பாடல்களில் அதிக வாய்ப்பு இல்லை என்பதனை அறியலாம்.

என்றாலும், ஐந்திணைப் பிரிவை அடிப்படையாகக் கொண்டு நில வருணனை செய்வதன்மூலம், நாட்டு வருணனையையும், அந்தப் பெயர் இல்லாவிட்டாலும், பாடியுள்ளார்கள் என்பது தெளிவு. இங்கு நாட்டை அரசியல் அடிப்படையில் பிரிக்கவில்லை.

இந்த அடிப்படைதான் பின்னர்த் தோன்றிய காப்பியங்களுக்கு நாடு, நகர வருணனை செய்ய அடித் தளமாக அமைந்தது. சங்கப் பாடல்களில் வரும் நில

வருணனைகளில் இயற்கைக் காட்சிகளை மட்டும் வருணிக்காமல் அந்த நிலங்களில் வாழும் மனிதர்கள், உணவு வகைகள், வாழ்க்கைமுறை, எண்ண ஓட்டம், மேற்கொண்ட தொழில் என்பவை பற்றியும் விரிவாகப் பாடியுள்ளனர்.

திணைப் பிரிவு செய்த ஆசிரியர் தொல்காப்பியர், தெய்வம், உணாவே, மா, மரம், புள், பறை முதலானவற்றைக் கருப் பொருள் என்ற தலைப்பில் கூறிச் சென்றுள்ளார்.

எனவே, தொல்காப்பியர் காலத்துக்கு முன்னரே நில வருணனை என்பது மிக விரிந்த நிலையில் பாடப் பட்டிருக்க வேண்டும் என்று நினைப்பதில் தவறில்லை.

உதிரியான சங்கப் பாடல்களில் இடம் பெறாமல் நீண்டிருக்கின்ற மதுரைக் காஞ்சி, பட்டினப் பாலை, ஆற்றுப்படைகள் ஆகியவற்றுள் காணப்பெறும் நில (நாடு) வருணனைகளும் நகர வருணனைகளும் தமிழ் இலக்கிய வளர்ச்சியில் ஒரு திருப்புமுனை ஆகும்.

இந்த வளர்ச்சி, காப்பிய வடிவு பெற்ற சிலப்பதிகாரத்திலும் மணிமேகலையிலும் தனிப்பட்ட முறையில் ஏனோ இடம் பெறவில்லை. மதுரை, காவிரிப்பூம் பட்டினம் என்ற இரண்டு நகரங்களில் வாழும் மேட்டுக்குடி மக்களின் வாழ்க்கை முறையை விரிவாகப் பாடும் சிலம்பு, பாண்டிய நாடு, சோழநாடு என்ற அடிப்படையில் பொதுவாகப் பேசவில்லை.

இவ்விரு காப்பியங்களை அடுத்துத் தோன்றிய உதயணன் கதையில் (பெருங்கதை) தனியாக இவ் வருணனைகள் பாடப்பட்டிருந்தனவா, இல்லையா என்று அறிய வாய்ப்பில்லாமல், காப்பியத்தின் முற்பகுதி கிடைக்கவில்லை.

இதனை அடுத்துத் தோன்றியவை பக்தி இயக்கக் காலப் பாடல்கள். அவற்றுள் இந்த வருணனைகள் எதிர்

பார்த்தல் நியாயமில்லை; என்றாலும், மலைவருணனை, மருதநில மக்கள் வருணனை என்பவைபற்றி ஆங்காங்கே சுட்டிச் செல்கின்றன திருஞானசம்பந்தர் தேவாரப் பாடல்கள்.

முழுமையாக, காப்பிய வடிவில் முதன்முதலில் தோன்றியது கம்ப நாடனின் இராமாவதாரக் காப்பியமே ஆகும்.

சங்க இலக்கியங்களில் துளையமாடிய கம்பநாடன், நாட்டையும் மக்களையும் தனித் தனியே வருணிக்க வேண்டும் என்ற புதுமையை முதன்முதலில் புகுத்து கிறான்.

மன்னராட்சி நன்கு வளர்ந்து செம்மைப்பட்ட நிலை யில் கம்பன் தோன்றியவன்; ஆதலின், கோசல நாட்டை யும் அயோத்திமா நகரத்தையும் வருணிப்பதில் பெருங் கவனம் செலுத்துகிறான்.

தமிழ் இலக்கியத்தில் மட்டுமல்லாமல் ஏனைய மொழிக் காப்பிய இலக்கியங்களிலும் காணப்படாத சில புதுமைகளைக் கவிச் சக்கரவர்த்தி தன் காப்பியத்தில் புகுத்துகிறான்.

சங்க இலக்கியங்களில் வரும் இயற்கை வருணனை, மக்கள் வருணனை என்பவற்றுள் தன்மைநவிற்சி அணியே இடம் பெற்றுள்ளமையைக் காணலாம்.

மருதநில மக்கள், நகர மக்கள் என்ற வேறுபாட்டை மதுரைக் காஞ்சி முதலிய நூல்களில் காணலாமேனும், எப்படி வாழ்ந்தார்களோ அதனை அப்படியே கவிஞர்கள் பாடியிருப்பதைக் காண முடியும்.

'சுவர்க்க நீக்கம்' (*PARADISE LOST*) 'தெய்வீக இன்பியல்' (*DIVINE COMEDY*) போன்ற காப்பியங்களில் முறையே சுவர்க்கம், நரகம் என்பவற்றின் வருணனை களும் இத்தாலிய நாட்டின் ஒரு பகுதி வருணனையும் இடம் பெற்றிருக்கக் காணலாம்.

சுவர்க்க, நரக வருணனைகள் முற்றிலும் கவிஞனின் கற்பனை; ஆகலின், பிறவற்றோடு ஒப்புமை காண வழி யில்லை. 'தெய்வீக இன்பியல்' நூலில் தாந்தே (DANTE) நகர வருணனை, நரக வருணனை என்று அடுத்தடுத்துக் காட்டுவது மேனாட்டு இலக்கிய வளர்ச்சியில் ஒரு கூறாகும்.

எந்த வகையில் பார்த்தாலும் நாடு நகர வருணனை செய்யும்பொழுது இயற்கைக்கும் நடைமுறைக்கும் மாறு படாமல், அதே நேரத்தில் ஈடு இணையற்ற இலட்சியத் தன்மை வாய்ந்த நாடு, நகரம் என்பவற்றைக் கம்பன் படைத்ததுபோல வேறு எந்தக் காப்பியமும் (தமிழில்கூட) படைக்கவில்லை.

பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த தாமஸ் மூர் 'உட்டோப்பியா' (UTOPIA) என்ற பெயரில் ஒரு கற்பனை நாட்டைப் படைக்கிறார். 'உட்டோப்பியா'வில் ஒரு நகர அமைப்பு, அந்நகரில் வாழ்கின்ற உழவர், தொழிலாளர் முதலியோர் வாழ்க்கை முறை, நீதி பரிபாலனம், ஒருவர்க்கொருவர் நட்புக்கொண்டு வாழும் இயல்பு, பிறரிடம் அம்மக்கள் கொள்ளும் உறவு முறை போல்வனவற்றைப் பற்றி விரிவாகப் பேசியுள்ளார்.

இவர் (தாமஸ் மூர்) எந்த அளவு கம்பனைப் பின் பற்றிச் செல்கிறார் என்பது கற்று மகிழ வேண்டிய பகுதியாகும்.

நிலம், பொழுது இரண்டனையும் முதற்பொருள் என்று தொல்காப்பியர் கூறியிருப்பினும், நாடு என்று சொல்லும்பொழுது ஏனையோரைப் போல இத்தமிழர்கள் நிலம், இயற்கை என்பவற்றை முதன்மையாகக் கொள்ள வில்லை என்று நினைய வேண்டி உள்ளது.

**நாடு ஆக ஒன்றோ; காடு ஆக ஒன்றோ;**
**அவல் ஆக ஒன்றோ; மிசை ஆக ஒன்றோ;**
**எவ்வழி நல்லவர் ஆடவர்**
**அவ்வழி நல்லை; வாழிய நிலனே !**

*(ஔவையார்) புறநானூறு—187*

இப் புறப்பாடல் மூலம் அவ்வளவு பழைய காலத்திலேயே ஒரு நாட்டின் சிறப்பு அங்கு வாழும் மக்களைப் பொறுத்தது என்பதனை இத்தமிழர்கள் அறிந் திருந்தனர் என்று யூகிக்க முடிகின்றது.

நாட்டில் வாழுகின்ற மக்களும் அரசர்களும் செம்மை வழி நிற்கவில்லை என்றால், பிற வளங்கள் எவ்வளவு இருந்தாலும் அவற்றால் பயனில்லை என்று மற்றொரு புறப்பாடல் கூறுகின்றது.

**வேந்தரும் பொருது, களத்து ஒழிந்தனர், இனியே**
**என் ஆவது கொல் தானே— கழனி**
**ஆம்பல் வள்ளித் தொடிக்கை மகளிர்**
**பாசவல் முக்கி, தண்புனல் பாயும்,**
**யாணர் அறாஅ வைப்பின**
**காமர் கிடக்கை அவர் அகன்தலை நாடே?**

*(புறநானூறு— 63)*

இந்த அடிப்படையில் பார்த்தால்

**நாடென்ப நாடா வளத்தன; நாடல்ல**
**நாட வளந்தரு நாடு**

**(திருக்குறள்— 739)**

என்று வள்ளுவன் கூறும்பொழுது 'நாடா வளத்தன' என்பதற்கு 'உழைக்காமல் பெறுகின்ற செல்வம்' என்று

குறிப்பிடும் உரையாசிரியர் கூற்றுக்கு மேலும் ஆழமான பொருள் உண்டோ என்று நினைக்கத் தோன்றுகின்றது.

நாடு என்ற அதிகாரத்தின் முதற் பாடலில் 'தள்ளா விளையுள்' பற்றிக் கூறிய வள்ளுவர், அடுத்துத் தக்கார் என்று கூறுவதன் மூலம் இக்கருத்தை வலியுறுத்து கின்றார்.

விளைச்சல் முதலியவற்றை 1, 2, 6, 8 ஆய குறட்பாக் களில்— (இயற்கை வளம்) பேசிய வள்ளுவர், ஏனைய பாக்களில் மக்கள் (மன) வளத்தையே பேசுகிறார்.

'வளத்தன' என்பது அஃறிணை முற்றே ஆயினும், உயர்திணைக்கு உரிய முடிபாகப் பொருள் கொள்ள லாமோ என்றும் தோன்றுகிறது.

சிறந்த நாடு, மண் வளத்தால் தள்ளா விளையுள் பெற்றிருப்பது போல, மக்கள் மன— வளம் இயல்பாகப் பெற்றிருக்க வேண்டும். அதனைத்தான் நாடா வளம் என்று சொல்கின்றாரோ என்றுகூட நினைக்கத் தோன்று கிறது.

எத்துணை வளம் இருப்பினும் மக்கள் மனவளம் இல்வழி அது பயனற்றதாகும் என்று கருதிய தமிழர், அந்த இயற்கை வளத்திற்குக்கூட மக்கள் மனவளமே காரணம் என்று கருதினதாக நினைக்க முடிகிறது.

**சாலி நெல்லின் சிறைகொள் வேலி**
**ஆயிரம் விளையுட்டு ஆகக்**
**காவிரி புரக்கும் நாடு கிழவோனே**

(பொருநர்— 246-8)

இவ்வடிகள் இவ்வாறு நினைக்கத் தூண்டும்.

'ஆக' என்ற வினை எச்சம் 'புரக்கும்' என்ற பெயரெச்சத்தோடு இயைவதைப் பார்த்தால் இந்த

விளைச்சலுக்குக் காரணம் சோழனுடைய ஆட்சிச் சிறப்பே என்று ஆசிரியர் பெற வைக்கிறார்.

இக்கருத்துக்களையெல்லாம் நன்கு சீரணித்துக் கொண்ட கம்பநாடன், சங்கப் புலவர்களும் ஏனையோரும் காணாத ஒரு கற்பனை நாட்டை— பதினைந்தாம் நூற்றாண்டில் வாழ்ந்த தாமஸ் மூர் காண முயன்ற நாட்டைப் படைக்க முயல்கிறான்.

வேடிக்கை என்னவென்றால், அவன் தனக்கு மூல நூலாகக் கொண்டதாகக் குறிப்பிடும் வான்மீகத்தில் நாட்டைப் பற்றி ஒரே ஒரு வரிதான் உள்ளது.

பழைய தமிழ் மரபுப்படி தான் புதிதாகக் கண்ட ஒன்றனைக்கூடத் தான் கண்டதாகக் கூறாமல்

**ஆங்கு அவன் புகழ்ந்த நாட்டை**
**அன்பெனும் நறவம் மாந்தி**
**மூங்கையான் பேசலுற்றான் என்ன**
**யான் மொழியல் உற்றேன்** (32)

என்றே பாடுகிறான்.

எனவே, வான்மீகியும் தமிழ்ப் புலவர்களும், ஏன் மேனாட்டு புலவர்களும் கற்பனை செய்யாத ஒரு நாட்டை, நகரைக் கம்பன் அமைக்கின்றான்.

நாட்டின் சிறப்பைக் கூறும்பொழுது மண்வளத்தை விட, மக்கள்-மன-வளத்தைப் பெரிதாகப் பாடிய புறப் பாடலோ, திருக்குறளோகூட, கம்பன் மக்களின் தலையாய பண்பு என்று எடுத்த எடுப்பிலேயே, பெரிதாகப் போற்றும் ஒரு பண்பைச் சுட்டிக் காட்டியதாகத் தெரிய வில்லை.

உட்பகையின்மை, மடியின்மை, பெருமுயற்சி என்பவற்றை அடிப்படைப் பண்புகளாக, நாட்டு மக்களின் இலக்கணமாகக் கூறும் இடத்தில் வள்ளுவர் '**புலனடக்கத்தை**' உயர்த்திப் பாடவில்லை.

இவர்கள் யாரும் கூறாத முறையில்

**ஆசலம் புரி ஐம்பொறி வாளியும்**
**காசு அலம்பும் முலையவர் கண் எனும்**
**பூசல் அம்பும் நெறியின் புறஞ் செலாக்**
**கோசலம் புனை ஆற்று அணி கூறுவாம்** (12)

என்று கூறும்பொழுது, ஏனையோரைவிடக் கம்பன் மிக உயர்ந்து காணப்படுகிறான் என்பதை அறிய முடிகிறது.

வள்ளுவர் காலத்தில் தமிழருடைய நாகரிகமும் வாழ்வு முறையும் மிகச் சிறந்து வளர்ந்திருந்தன என்பதில் ஐயமில்லை. ஆனால், சமுதாய வாழ்க்கை, நகர வாழ்க்கை என்பவை ஒன்பதாம் நூற்றாண்டில் வளர்ந்திருந்தது போல் இரண்டாம் நூற்றாண்டில் இருந்திருக்க வாய்ப்பு இல்லை.

எனவேதான், 'மெய்யுணர்தல்', 'அவா அறுத்தல்' முதலிய அதிகாரங்களை 'அறத்துப்பாலில்', 'துறவறவியலில்' வைத்தாரோ என்றும் நினைக்கத் தோன்றுகிறது.

சிறிய கிராமங்கள், ஓரளவு வளர்ச்சி அடைந்த சிறு நகர்கள் என்பவைதாம் சங்க காலத்தில் மிகுதியாக இருந்திருக்க வேண்டும். மதுரை, காவிரிப்பூம்பட்டினம், உறையூர் போன்ற நகர்கள் விரல் எண்ணிக்கையில் அடங்குவனவாகவே இருந்தன.

எனவே, அதிகப்படியான மக்கள் கூடி வாழும் பெரு நகரம், அதனில் இயல்பாகத் தோன்றும் போட்டிச் சமுதாயம் (Competitive Society) என்பவற்றால் விளை

யும் ஊறுகளைப் பல்லவர் காலத்தை அடுத்து, சோழா காலத் தொடக்கத்தில் வாழ்ந்த கம்பநாடன் நன்கு அறிய முடிந்தது.

எனவே, வள்ளுவன் அமைக்காத முறையில், சங்கப் புலவர்கள் கற்பனை செய்யாத வகையில் நாடு நகர் பற்றிக் கூறத் தொடங்கும் பொழுதே,

**பொறிகள் புறஞ்செலா**

மக்கள் வாழ்கின்ற கோசலம் என்று அமைக்கின்றான்.

தமிழ், வடமொழி, இன்னும் பிற மொழிக் காப்பியங்கள் அனைத்தையும் எடுத்துக் கொண்டு பார்த்தாலும் நாட்டு வருணனையில் மக்கள் சிறப்பைச் சொல்லும் பொழுது ''பொறிகள் புறஞ்செலா மக்கள் வாழ்கின்ற நாடு'' என்று பாடியவன் கம்பன் ஒருவனேயாவான்.

பல பாடல்களில் இயற்கை வருணனையை ஈடு இணையின்றிப் பேசுகிறான் கம்பன் என்பதனை அறிவோம். அவற்றுள் இரு பாடல்கள் நம் சிந்தனையைத் தூண்டுவனவாகவே உள்ளன:

**சேல் உண்ட ஒண்கணாரில் திரிகின்ற செங்கால் அன்னம்,**
**மால் உண்ட நளினப் பள்ளி, வளர்த்திய மழலைப் பிள்ளை,**
**கால் உண்ட சேற்றுமேதி கன்று உள்ளிக் கனைப்பச் சோர்ந்த**
**பால் உண்டு, துயில, பச்சைத் தேரை தாலாட்டும் பண்ணை**

**ஈரநீர் படிந்து இந்நிலத்தே சில**
**கார்கள் என்ன, வரும் கருமேதிகள்,**
**ஊரில் நின்ற கன்று உள்ளிட மென்முலை**
**தாரை கொள்ளத் தளிர்ப்பன சாலியே** (44, 56)

இவ்விரு பாடல்களும் நாட்டு நடைமுறையில் ஒரு சிறப்பான பகுதியைக் குறிக்கின்றன.

மேய வந்த எருமைகள், நன்கு மேய்ந்த பிறகு ஊரில் உள்ள தம் கன்றுகளை நினைக்கின்றன. அந்நினைவு தோன்றியவுடன் அவற்றின் மடியில் இருந்து பால் சுரக்கின்றது.

இவ்வாறு ஒழுகிய பால் அன்னத்தின் மழலைப் பிள்ளை உண்பதற்கும், சாலி நெல் நன்கு தழைத்து வளர்வதற்கும் காரணமாக, அமைகின்றது.

ஆனால் சாலியும், அன்னக் குஞ்சும் உண்பதற்காக அவ்வெருமைகள் இப்படிப் பாலைத் தரவில்லை. எங்கேயோ இருக்கின்ற கன்றை நினைத்ததால் சுரந்த பால் எருமையோடு எவ்விதத் தொடர்பும் இல்லாத நெல்லுக்கும் அன்னக் குஞ்சுக்கும் பயன்படுகிறது என்று கவிஞன் பாடுவது வெறும் கற்பனையாக மட்டும் தோன்றவில்லை.

சமுதாயத்தின் மேட்டுக் குடியினராகிய பெருவணிகர், பெருந் தொழிலதிபர் என்பவர்கள் ஒரு வணிகத் தொழிலையோ தொழிற்சாலையையோ தொடங்கி நடத்துகிறார்கள் என்றால், அது அவர்களும் அவர்கள் குடும்பத்தாரும் அவர்கள் மக்களும் பயனடைய வேண்டும் என்ற கருத்தினாலேயே யாம்.

பெருவணிகம் என்பது சில நூறு பேருக்கும், பெருந் தொழில் என்பது சில ஆயிரம் பேருக்கும் வாழ்வளிப்ப தாக அமைகின்றதை இன்றும் காண்கிறோம்.

இப்பெரு மக்கள் தம் குடும்பம், உறவினர் என்பவர் வாழ்வு கருதித்தான் தொழிலைத் தொடங்குகிறார்கள். ஆனால், அதனால் பயனடையும் ஆயிரக் கணக்கானவர் தொழில் முதல்வருடன் எவ்விதத் தொடர்பும் உடையவர் அல்லர்.

அதேபோலச் சாலியும் அன்னக் குஞ்சும் எருமையுடன் எவ்விதத் தொடர்பும் பெற்றிராவிடினும் அதன் பயனை அனுபவிக்கின்றன.

வளமுடைய பெருங்குடி மக்கள் மேலும், மேலும் தம் தொழின் முறையைப் பெருக்குவதன் மூலம் பலருக்கு வாழ்வளிக்க வேண்டும் என்ற கருத்தும் கம்பருடைய இவ்விரு பாடல்களிலும் அமைந்து கிடக்கின்றது என்னலாம்.

இவ்வாறு பாடுவதனை இலக்கியத் திறனாய்வாளர் குறிப்பு (**Suggestion**) என்று கூறுவர்.

மேலை நாடுகளில் வாஷிங்டன், நியூயார்க், லண்டன் நகரங்களில் குற்றங்கள் பெருகுவதற்கான காரணங்களை ஆய்ந்த உளவியலார் 'வறுமைக் கோட்டிற்குக்' கீழ் உள்ள சிறுவர்கள் இளைஞர்கள் ஆகியோர் பொழுது போக்கு வதற்கோ விளையாடுவதற்கோ அறிவு வளர்க்கும் கல்வியைப் பெருக்கிக் கொள்வதற்கோ வாய்ப்பும் வசதியும் இல்லாக் காரணங்களாலேயே அவர்கள் தம்முள் சண்டை இடுதல், சிறு சிறு குற்றங்கள் இழைத்தல் முதலியவற்றில் ஈடுபடுகின்றனர் என்று கண்டு கூறி யுள்ளனர்.

ஆகவே, நகர அமைப்பில் சிறார்கள், குழந்தைகள், மகளிர், இளைஞர்கள்— வாழ்வை வளர்த்துக் கொள்ளும் பணியில் ஈடுபட்டுள்ள நேரம் போக— எஞ்சிய நேரங்களில் சிறந்த முறையில் பொழுதுபோக்க விளையாட்டரங் கங்கள் முதலியன அமைதல் வேண்டும் என்னும் தற்கால அறிவியலார் கூற்றை மெய்ப்பிப்பது போல் அமைந்துள்ள பாடல்:

**பந்தினை இளையவர் பயில்இடம்,— மயில்ஊர்**
**கந்தனை அனையவர் கலை தெரி கழகம்,—**

**சந்தன வனம் அல, சண்பக வனம் ஆம்;**
**நந்தன வனம் அல, நறை விரி புறவம்** (79)

என்பதாம்.

பொருந்து கல்வியும் செல்வமும் பூத்த பெருந்தடங்கண் பிறை நுதலார் ஒருபுறம் பந்து பயிலிடம், கலை தெரி கழகம்— இவை மக்கள் வளம்; கலம் சுரக்கும் நிதியம், நிலம் பெருக்கும் வளம், நன் மணி சுரக்கும் பிலம்— இவை இயற்கை வளம்.

இத்துணை வளம் இருந்தும் நெறி கடவாதவர்களாய், குறிக்கோள் அழியாதவர்களாய், காதைகள் சொரியும் செவிநுகர் கனிகளை உண்டு தேக்கெறிகின்ற உயர் பண்பு உடையவர்களாக அந்நகர மக்கள் வாழ்ந்த காரணத்தினாலேதான் அங்குக் குற்றம் இல்லை; கூற்றம் இல்லை. சிந்தையில் செம்மை உடையவர் ஆகலின் சீற்றம் எழ இடம் இல்லை. பல் கேள்வி மேவலான் அவரிடை வெண்மை இல்லை.

கீதை கூறும் சம திருஷ்டி வாழ்க்கையை அனைவரும் மேற்கொண்டார்கள் என்று கூறுவதனால் குறிக்கோள் தன்மை பெற்ற ஒரு நாட்டை, அந்நாட்டில் உள்ள நகரத்தை, நகர மக்களை எப்படிப் படைக்க வேண்டும் என்பதனைக் கம்பன் தனக்கே உரிய முறையில் எடுத்துக் காட்டுகிறான்.

இத்தகைய குறிக்கோள்தன்மை பெற்ற நாட்டை, மக்களை, அவர்கள் வாழும் முறையைப் படைத்துவிட்ட கவிஞன், இவ்வனைத்தையும் ஒன்று சேர்த்து இவற்றின் எப்பகுதியிலும் எந்த ஒரு சிறு குறைகூட இல்லை என்று நிலைநாட்ட விரும்புகிறான்.

இதுவரை சொல்லிய பகுதிகளில் மக்கள் மனவளம் கூறியிருப்பினும் கோசலம், அயோத்தி மக்களுடைய

ஆன்மீக வளம் தனிப்படப் பேசப் பெறவில்லை. எனவே, அதனையும் சேர்த்துச் சொல்ல விரும்பிய கவிஞன் நகரப் படலத்தின் ஆறாம் பாடலில் ஈடு இணையற்ற முறையில் இதனைச் சொல்கிறான்.

அருள், அறம் என்பவற்றைத் துணைக்கொண்டு, ஐந்தும் அவித்து, பொங்கு மாதவமும் ஞானமும் பெற்றவர்கள் அனைவரும் வாழ்வின் குறிக்கோள் ஆகக் கருதுவது வீடுபேறே ஆகும்.

கற்றோர், கல்லார், நல்லார், தீயோர், உடையார், இல்லார் ஆகிய அனைவருக்கும் புகலிடமாக அமைவது செங்கண் மால் திருவடியே ஆகும்.

அச்செங்கண்மாலே தன் இருப்பிடத்தை விட்டு இங்கு வந்து பிறந்து அளப்பருங் காலம் வாழ விரும்பினான் என்று கூறுமுகத்தால் குறிக்கோள் தன்மை பெற்ற நாட்டை, நகரத்தைத் தான் அமைத்த முறை சரியானது என்று காட்டுவது போலச் 'செங்கண்மால் வந்து வாழ்ந்த இடம் இது' என்று கூறுகிறான்.

கடவுள் இங்கு வந்து பிறந்தான் என்று கூறாமல், கடவுளே இங்குப் பிறக்க விரும்பினான் என்று கூறும் வகையில் நாட்டு, நகரச் சிறப்பை ஒப்பற்றதாக ஆக்கிக் காட்டுகிறான், கம்பநாடன்.

# 2. மன்னன்

## அயோத்தி வேந்தன்

### தசரதன் சிறப்பு

கம்ப ராமாயணம் என்னும் பெருங்காப்பியத்தில் அளவால் மிகச்சிறு பகுதியைப் பெற்றவன் தசரதன்.

பாலகாண்டத்தின் முற்பகுதியில் தோன்றி, அக் காண்டத்தின் இறுதியில் சில வார்த்தைகள் பேசும் வாய்ப்பு அவனுக்குக் கிடைக்கிறது.

அயோத்தியா காண்டத்தின் முற்பகுதியில் மூன்று படலங்களிலும் அவனுடைய செயல்களே நிறைந் துள்ளன.

அடுத்து வரும் பகுதியில் அவன் இறந்து விடுகிறான். பத்தாயிரம் பாடல்கட்கு மேல் உள்ள அப்பெருங் காப்பியத்தில் காப்பியத் தலைவனின் தந்தையாகிய அவன் பெறும் இடம் சிறிதுதான். ஆம். இராமகாதையில் தயரதனுக்குப் பேரளவு இடம் கொடுக்கமுடியாதுதானே? எனினும், அப்பெருங்காதை நிகழக் காரணமாகிற

பெருமை அவனைச் சேர்ந்தது. அறுபதினாயிரம் ஆண்டு (அதாவது நெடுங்காலம்) ஆட்சி செய்ததாகக் கூறப்படும் அவன், எல்லாவகை வலியாலும் மேம்பட்டவன் என்பதை அறியமுடிகிறது.

தசரதனைப் பேரரசனாகவும், கணவனாகவும், தந்தையாகவும் கம்பநாடன் நமக்குக் காட்டுகின்றான். அவனுடைய செயல் ஒவ்வொன்றிலும் இம்மூன்று நிலைகளும் மாறி மாறி வருகின்றன. அரசியற்படலத்திலேயே அவனது அரச இயல்பைப் பற்றிக் கூறுகிறான் கவிஞன். ஒரு நாட்டின் அரசன், தந்தைக்கு மைந்தனாய்ப் பிறந்த காரணத்தால் மட்டும் அரசனாகிவிடுதல் தவறு. அரசனாதற்குரிய இயல்புகளும் அவன்பாற் பொருந்தியிருத்தல் வேண்டும். அவ்வியல்புகளுள் தலையாய இயல்பு **கல்வி** என்பதாகும். இதனாலன்றோ வள்ளுவப் பெருந்தகையார், **இறைமாட்சி**யின் அடுத்த அதிகாரமாகக் **கல்வி**யை வைத்துள்ளார்! கோசல நாட்டு மக்களே கல்வியிற் சிறந்தவர்கள் என்றால், அந்நாட்டு மன்னனைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமா? என்றாலும், தனியே அரசனுடைய கல்வி பற்றியும் பேசப்படுகிறது. **''எண்ணில் நுண்ணூல் ஆய்ந்தே கடந்தான் அறிவென்னும் அளக்கர்,''** (172) என்ற அடியால் அரசன் கல்விப் பெருக்கம் பேசப்படுதல் அறியப்படும். இத்துணைக் கல்விப் பெருக்கமும் ஏட்டளவில் நின்றுவிடாமல், அம் மன்னனுக்கு வாழ்க்கையிலும் பயன்பட்டதை நாம் அறிகிறோம். தான் அரசனாகப் பிறந்தமையின் தன் கடன்கள் அதிகப்பட்டன என்பதை உணர்ந்து, அதற்கேற்பவே வாழ்ந்தான் அத் திருவுடைமன்னன்.

**தாய்ஒக்கும் அன்பில்; தவம்ஒக்கும் நலம்ப யப்பில்;**
**சேய்ஒக்கும் முன்னின்று ஒருசெல்கதி உய்க்கும் நீரால்;**
**நோய்ஒக்கும் என்னின் மருந்துஒக்கும்; நுணங்கு கேள்வி**
**ஆயப் புகுங்கால் அறிவுஒக்கும் எவர்க்கும் அன்னான்.**

(171)

என்ற இப்பாடலால் அவ்வரசன் கற்ற கல்வியின் வண்ணம் ஒழுகினான் என்பதை அறிய முடிகிறது.

ஏட்டுக்கல்வி மட்டும் அல்லாமல், நுணங்கு கேள்வி யாகிய செவிச் செல்வமும் பெற்றிருந்தமையின், பண்பாடு மிகுவதாயிற்று மன்னனுக்கு. அப்பண்பாட்டால் குடிகட்கும் தனக்கும் உள்ள உறவு முறை எது என்பதைத் தெரிந்துகொண்டான் தசரதன்.

நாட்டில் பகை இன்மையால் சில சந்தர்ப்பங்களில் நாட்டை ஆள்பவர் கவலை இன்றித் திரிய இடமுண்டாகி விடுகிறது. ஐந்து ஆண்டுக்கு ஒரு முறை விண்ணப்பம் செய்து நம்மிடம் வந்து வாக்குரிமை பெற வேண்டும் என்ற கட்டுப்பாட்டில் இருக்கும் பொழுதுகூட நம்மால் தேர்ந்தெடுத்து நாடாள அனுப்பப்படுபவர்கள், தேர்தல் முடிந்தவுடன் தங்கள் வாக்குறுதிகளைக் காற்றில் பறக்க விடுகின்றார்கள். இவ்வாறல்லாமல், பரம்பரை உரிமை யாக அரசியல் கிடைத்துவிடுமாயின், அரசன் ஓயாது குடி நலன் காப்பதற்குத் தூண்டுகோல் யாதுளது? ஒரு வேளை பகைவர்கள் இருப்பார்களாயின், அவர்களுக்கு அஞ்சியாவது நல்லாட்சி நடத்துவன். பகைவர் இல்லாத பொழுதும் ஓர் அரசன் செவ்வண் ஆட்சி செய்தான் எனில், அதற்கு அவன் பண்பாடு தவிர வேறு காரணம் ஒன்றும் இருத்தற்கில்லை. இதனை மனத்துட்கொண்ட கவிஞன்,

> **எய்என எழுபகை எங்கும் இன்மையால்**
> **மொய்பொருந் தினவுஉறு முழவுத் தோளினான்**
> **வையகம் முழுவதும் வறிஞன் ஓம்பும்ஓர்**
> **செய்எனக் காத்துஇனிது அரசு செய்கின்றான்** (179)

என்று கூறுகிறான். எல்லை மீறிய செல்வமும் மனிதனைக் கெடுத்துவிடும். 'அதிகாரம் கெடுக்கும்; ஏதேச்சாதிகாரம்

முழுவதும் கெடுத்தேவிடும்,' என்று ஆக்டன் பிரபு[5] கூறியதும் "எங்கு செல்வம் குவிகிறதோ, அங்கு அழிவும் தொடங்கு கிறது," என்று 'கோல்ட்ஸ்மித்து'[6] என்ற பெரியார் கூறியதும் "பணத்தின் பெருக்கம் பாவத்தின் பெருக்கம்"[7] என்று மகாத்துமா காந்தியடிகள் கூறியதும், "பட்டம் பதவிகெட்ட மாயை" என்று பாரதியார் இசைத்ததும் நினைவில் இருத்தி நாம் இப்பாடலை நோக்க வேண்டும். அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆட்சி செய்யும் ஒருவன் செம்மையாக ஆளுவான் என்பது கூறவியலாதது. அதிலும், அவன் அதிகாரத்தைத் தடை செய்யக்கூடிய பகைவரும் இல்லை எனில், கேட்க வேண்டுமா? எல்லையற்ற அதிகாரம், நீண்ட ஆட்சிக்காலம் என்ற இரண்டுள் ஒன்று இருந்தாலுமே ஓர் அரசன் கெட்டுவிட முடியும். ஆனால், தசரதனுக்கு இவை இரண்டும் இருந்துங்கூட அவன் கெடவில்லை என்கிறான் கவிஞன். 'கெடாது இருந்துவிட்டால் மட்டும் போதுமா? பிறருக்கு நலன் தீங்கு என்ற இரண்டுமே செய்யாத பலர் உண்டே! அது போல இம்மன்னனும் மக்களுக்கு நலத்தையோ தீங்கையோ செய்யாமல் இருந்துவிட்டானோ?' என்பார் ஐயத்தைப் போக்கப் பின் இரண்டு அடிகளைக் கவிஞன் குறித்துவிட்டான். தசரதன் நாட்டை ஆள்வது, 'வறிஞன் ஒருவன் தனக்குரிய ஒரே நன்செய்யைக் காப்பது போல இருக்கிறது,' என்றான். உவமையாகிய இதில் வைத்த சிறப்பெல்லாம் தசரதன் ஆட்சிக்குச் சென்று சேர்கிறது உவமை இலக்கணப்படி.

---

5 *'Power corrupts and absolute power corrupts absolutely.'— Lord Aucton*

6 *Where wealth accumulates there man decay— Goldsmith*

7 *Accumulation of wealth is accumulation of sin— Gandhiji*

## உவமையின் பொருள்

'ஒருசெய்' என்பது, அளவால் மிகச் சிறிய இடமாகும்; அத்துடன் உரமிட்டு, நீர் பாய்ச்சி, களை எடுத்து, நன்கு உழைத்துப் பாடுபட வேண்டிய நன்செய் நிலத்தைக் குறிப்பதுமாகும். இந்த இடத்திற் பயிர் செய்து அதில் வரும் வருவாயை நம்பியே வாழ்கிறான் ஒருவன். 'வறிஞன்' என்றதால், அவன் வாழ்வுக்கு இந்நிலத்தை யன்றிப் பிறிதொரு வழியும் இல்லை என்பது பெறப்படும். எனவே, அவன் எவ்வளவு முயன்று இதனைப் பாது காப்பான் என்பது வெளிப்படை. இவ்வுவமையில் பெறப் படும் மற்றொரு பொருளும் உண்டு: வறிஞனுக்கு உவமை யாகத் தசரதனும் நிலத்துக்கு உவமையாக வையகமும் காட்டப் பெற்றுள்ளனர். 'நிலத்தை நன்கு காக்கவில்லை யாயின், அதனால் விளையும் தீமை வறிஞனுக்கே அன்றி, நிலத்துக்கு அன்று. அதுபோல, நாட்டை நன்கு காவா விடில் நாட்டுக்குத் தீமை இல்லை; மன்னனுக்கே தீங்கு நேரிடும்' என்பதன்றோ பொருளாகும்? இஃது உண்மையா? உண்மையில் மன்னன் தவறு இழைப்பா னாயின், மக்களன்றோ அல்லல் அடைவார்கள்? இவ் உவமையில் ஏற்படும் இப்பிழையை அறியாமலா கவிஞன் பயன்படுத்தினான்? அன்று. நாட்டை நன்கு காவாவிடில், அதனால் விளையும் பயனைக் கண்டு நாட்டு மாந்தர் வருந்துவதைக் காட்டிலும் மன்னனாகிய அவன் வருந்தினான். இவ்வாறு பிறர் பெறுந் துயரைத் தான் பெறுவதாக நினைந்து வருந்தின மன்னன் ஆகலின், வேண்டுமென்றே கவிஞன் இந்த உவமையைக் கையாள் கிறான். இத்தகைய அரசனை நினைக்கும்பொழுது பாரதியார் பாடிய அடிகள் நினைவுக்கு வருகின்றன.

> **நாட்டு மாந்தர் எல்லாம் தம்போல் நரர்கள் என்று கருதார்**
> **ஆட்டு மந்தை யாமென்று உலக அரசர் எண்ணிவிட்டார்**
>
> (பாஞ்சாலி சபதம்)

என்பன போன்ற பருப்பொருளை இடைநிலைப் (*Medium*) பொருளாக உடைய கலையாகவும் முகிழ்க்க லாம்; அன்றேல், ஒலியையே இடைநிலைப் பொருளாக உடைய இசையாகவும் முகிழ்க்கலாம்; அன்றி, சொல்லும் பொருளும் ஓசையுமுடைய கவிதையாகவும் மலரலாம்.

இடைநிலைப் பொருள் பருப்பொருளாய் இருக்கும் பொழுது கலை சிறப்பதைவிட அது நுண்பொருளாய் இருக்கும் பொழுது மிகுந்த சிறப்பை அடைகின்றது. கலைஞன் கற்பனையின் ஓட்டத்துக்கு ஏற்பக் கல்லும், வண்ணமும் இடந்தாரா அல்லவா? அவற்றின் எல்லை அளவுதான் கலைஞன் செல்லமுடியும். ஆனால், சொல் லையும் பொருளையும் ஓசையையும் அளவாகவுடைய கவிதையில் கலைஞனுடைய 'சுதந்தரம்' மிகுதிப்படுதல் உறுதி. எனவேதான் கலைகளிலெல்லாம் கவிதைக் கலை சிறந்து விளங்குகின்றது. கலைஞன் சிறப்புக் கேற்பக் கலை சிறந்து விளங்கும் என்பது கூறத் தேவையில்லை. கவிதைக் கலைஞர்களுள் தலையிடம் பெறும் மிகச் சிலருள் ஒருவனாகிய கம்ப நாடனின் கலை மிகச் சிறந்திருக்கும் என்று எதிர்பார்ப்ப திலும் தவறு இல்லை. அவன் கைப்படாத பொருளே இல்லை என்றுகூடக் கூறிவிடலாம். மேலும், அவன் கைப்பட்டவெல்லாம் பொன்னாக மாறின என்பதிலும் ஐயமில்லை. இரண்டொரு பாடல்களில் காட்சியளித்து மறைகிற 'தோழி' போன்ற சிறு பாத்திரங்களிலிருந்து நூல் முழுதும் காட்சியளிக்கும் 'இராமன்' போன்ற பெரும்பாத்திரம் வரை அனைத்தையும் பொன்னாக மாற்றிய பெருமை அவனுடையதே. ஓர் அங்குல உயரமுடைய தந்தத்தில் ஒப்பற்ற வேலைத்திறனைக் காட்டுவதும் கலைதான்; மிகப்பெரிய தஞ்சைப் **பெருவுடையார் கோயில் கோபுரம்** போன்றவற்றில் வேலைத் திறனைக் காட்டுவதும் கலைதான். இவற்றுள் எது சிறந்தது என்று கேட்டலும் ஆராய்தலும் முறையாகாது.

கம்பநாடன் தனிப்பெருமை யாதெனில், இவ்விருவகைக் கலையிலும் அவன் வெற்றி கண்டுள்ளதே. இரண்டே பாடல்களில் தோன்றி மறையும் 'நீலமாலை' என்ற தோழியையும், இராமனைப் போலச் சாகாவரம் பெற்றவ ளாக்கி விட்டான். எனவே, இத்தகைய கலைஞனிடம் இருந்து எதனையும் கூசாமல் எதிர்பார்க்கலாமன்றோ?

## கவிதையிற் குழந்தை

அழகுடைப் பொருளையே கலைஞன் கலைக்கு மூலமாக நாடுகிறான் என்று கூறினோம். மக்கட் படைப்பில் 'பெண் இனம்' அழகின் இருப்பிடம். எனவே, கவிதைக் கலைக்கு மூலப்பொருளாகப் பெண் இருக்கிறாள் என்பதும் கண்டோம். பெண்ணை அடுத்து அவ்விடத் திற்கு வரக்கூடிய தகுதியுடைய பொருள் அழகே வடிவான குழந்தை ஒன்றுதான். குழந்தைச் செல்வத்தில் ஈடுபடாத கலைஞனே இல்லை என்று கூறிவிடலாம். அழகே வடிவமான குழந்தை எவ்வாறு கலைஞனைத் தன்னிடம் ஈடுபடுத்தாமல் இருக்க இயலும்?

> **இம்மை உலகத்து இசையொடும் பொருந்தி**
> **மறுமை உலகமும் மறுஇன்று எய்தும்**
> **செறுநரும் விழையும் செயிர்தீர் காட்சிச்**
> **சிறுவர்ப் பயந்த செம்மலோர்** (அகம் 66)

என்றும்,

> **மயக்குறு மக்களை இல்லோர்க்குப்**
> **பயக்குறை இல்லைத் தாம்வாழும் நாளே** (புறம் 188)

என்றும் சங்கப் புலவர்களால் பாராட்டப்படும் சிறப்புடையது குழந்தைச் செல்வம். பல ஆங்கில நாடகங் களை இயற்றிய ஷேக்ஸ்பியர், தாம் இயற்றிய நாடகங்களில்

குழந்தையைப் பற்றிப் பாட வாய்ப்பில்லாமையால் போலும் **ஜான் அரசன்'** (*King John*) என்றதொரு நாடகத்தை உண்டாக்கி, அதில் குழந்தைச் செல்வத்தைக் கலையாக்கி மகிழ்கிறான்! தமிழ் இலக்கிய உலகில் சங்க காலந்தொட்டுக் குழந்தை அழகில் ஈடுபடாத கவிஞனே இல்லை என்று கூறிவிடலாம். கடவுளையும் குழந்தை யாக்கி அதிலே ஓர் இன்பங்கண்டவன் அன்றோ தமிழன்? தமிழன் வழிபடும் முருகன், கண்ணன் இருவரும் குழந்தைகள் அல்லரோ? எனவே, குழந்தை இன்பத்தில் ஈடுபடாத மனிதனே இல்லை என்றால், கலைஞனைப் பற்றிக் கேட்கவும் வேண்டுமா?

கவிதைக் கலையிலும், தமிழ் இலக்கியத்தில் ஓரளவு குழந்தை இடம் பெற்றுளது. இடைக்காலத்தில் காப்பியங்கள் இயற்றிய பெரும்புலவர் அனைவரும் ஒருவர் நீங்கலாகக் குழந்தைச் செல்வத்தில் ஈடுபட்டு மகிழ்ந்தனர். குழந்தை பற்றிப் பாட வாய்ப்பே இல்லாத சேக்கிழாரும் ஞானசம்பந்தப் பிள்ளையாருக்குப் பத்துப் பாடல்கள் பாடி மகிழ்கிறார். இன்னும் பிற்காலத்தில் இக்குழந்தை ஒரு நூலுக்கே உரிமையாகிவிட்ட புதுமையும் காணக் கிடக்கிறது. உலகில் உள்ள வேறு எந்த மொழியிலாவது **'பிள்ளைத் தமிழ்'** என்றதோர் இலக்கியம் கண்டதுண்டா? 'நூறு பாடல்கள் குழந்தையைப் பற்றியே பாடத் துணிந்த தமிழனும் அவன் கலையும் வாழ்க!' என்று வாழ்த்துவது தவிர, வேறு செய்யத்தக்கது யாது? குழந்தை இத்துணை இடம் பெற்ற தமிழ் இலக்கியத்தில் ஒரு நூல் குழந்தை யைப் பற்றிப் பாடாதிருந்தால், அது வியப்பினும் வியப்பன்றோ? அதிலும் பல குழந்தைகளைப் பற்றிக் கூற வேண்டிய கட்டப்பாடு இருந்தும், பதினாயிரம் பாடல் கட்கு மேல் உடைய பெருநூலாய் இருந்தும், ஒரு நூல் குழந்தையைப் பற்றிப் பாடவில்லை என்றால், அந்நூல் எது என்று கேட்கத் தூண்டுகிறதல்லவா? அந்நூல் கம்பநாடனது ஒப்புயர்வற்ற இராமாயணந்தான்.

## ஏனோ பாடவில்லை?

தெய்வத் தன்மையுடன் மனிதத் தன்மையும் நிறைந் திருந்த இராமனைக் குழந்தையாய்ப் பெற்று இருக்கும் பொழுது ஏனோ கம்பநாடன் அதனைப் பயன்படுத்தி விரிவாகப் பாடவில்லை! தசரதன் பல காலம் தவமிருந்து பெற்ற புதல்வர்களை எவ்வாறு போற்றி மகிழ்ந்து கொஞ்சியிருப்பான்? அதுதான் கிடக்கட்டும் என்றாலும், முதல் தேவியாகிய கோசலையும், அவ்விராமனை வளர்த்த வளாகிய கைகேயியும் அவனைப் பாராட்டியிருக்க மாட்டார்களா? இவைபற்றி ஏனோ கம்பன் ஒரு பாடல் கூடப் பாடவில்லை! இராவணனின் அருமந்த மைந்த ராகிய 'இந்திரசித்தன்', 'அட்சயகுமாரன்' என்பவர் களையும் அவர்கள் குழந்தையாய் இருக்கும் பருவம் குறித்துப் பாடவில்லையே! போகட்டும். காப்பியத் திறனாய்வு செய்பவர்கள் இந்த இடத்திற்கு முற்றிலும் தேவையன்று என்று கூறுவர் என்பது அறிந்திருந்தும், பிரகலாதன் வரலாற்றை உயுத்த காண்டத்தில் பெய்து வைத்திருக்கிறானே! அங்கேயாவது அந்தப் பிரகலாதனைப் பற்றிப் பாடியதுண்டா?

இவை அனைத்தையும் நோக்க, ஓர் எண்ணம் உறுதிப் படுகிறது. இது புலவன் மறந்து விட்டுப்போன பகுதியன்று; வேண்டுமென்றே ஒதுக்கிய பகுதி என்றுதான் நினைக்க வேண்டியுள்ளது. கலைஞர் அனைவரும் கண்டால் விட விரும்பாத குழந்தைச் செல்வம், கம்பனால் ஒதுக்கப்பட வேண்டிய காரணம் யாதாக இருக்க முடியும்? அவனே நேரில் வந்து அக்காரணத்தைக் கூறினாற்றான் நாம் உறுதியாக அறிய முடியும். அவ்வாறு உறுதியாகக் கூறவியலாவிடினும் ஓரளவு அனுமானத்தால் இதுதான் என்று காரணத்தை நாமே குறிக்கலாம். குழந்தைச் செல்வத்தைப் பெற்று வைத்திருந்து, இடைக் காலத்தில் அக்குழந்தை தமக்குப் பயன்படாமல் போயிருந் தால், பின்னர் வாணாள் முழுவதும் குழந்தையைக்

கண்டால் பிடிக்காமல் இருப்பவர்கள் இன்றும் உண்டு. பிற குழந்தையைக் காணும் பொழுதெல்லாம் தம் குழந்தை நினைவிற்கு வர, அதனால் தோன்றும் துன்பம் கண்டு, குழந்தைகளையே தம்பால் நெருங்கவிடாமல் இருப்பவர்கள் இன்றும் உண்டு. இத்தகைய ஒரு மனநிலை கம்பனிடத்தும் தோன்றியிருக்குமோ என ஐயப்படுவதில் தவறில்லை.

## மகனை இழந்த கம்பனா?

'அம்பிகாபதி' என்றொரு மைந்தன் கம்பனுக்கு இருந்தானென்றும் அவன் அரசன் மகள் மேல் கொண்ட காதலால் உயிரை இழக்க நேரிட்டது என்றும் கதை வழங்கி வருதல் நம்முள் பலரும் அறிந்ததே. வேறு ஆதாரம் இல்லாமல் செவிவழிச் செய்தி ஒன்றையே நம்பி வாழும் இக்கதையில் உண்மை நிரம்ப உண்டு என்பதை இராமாயணத்தை ஒருமுறை கற்றவரும் அறிதல் கூடும். இராமனைப் பிரிய நேரிட்ட தசரதன் வருத்தத்தைக் கவிஞன் ஏறத்தாழ எழுபத்தைந்து பாடல்களால் விரிக்கிறான். அப்பாடல்களையும் அவற்றிற்கு முன்னும் பின்னும் காணப்படும் பாடல்களையும் படித்தால், ஒரு வேறுபாடு நன்கு தெரியும்; அரசன் வருத்தத்தைக் கூறும் பாடல்கள் கவிஞனுடைய கவிதை வன்மையால் மட்டும் தோன்றியவை அல்ல. அவை அவனுடைய நெஞ்சைப் பிழிந்து எடுத்த அவலத்தில் குமிழியிட்டு வெளிவரும் சொந்த அனுபவமே என்பது நன்கு புலப்படும். வயது முதிர்ந்த பருவத்தில், 'இனி இம்மைந்தன், நமக்குக் கொழு கொம்பாவன்!' என்று நினைந்து தந்தை இறுமாந்து இருக்கும் பொழுது மகன் இறக்கிறான்; இன்றேல் பயனற்ற நிலையில் காடு சென்று விடுகிறான். இறக்கும் மைந்தன் கம்பனுடைய செல்வக்குமாரன்; காடு செல்லும் மைந்தன் தசரதனுடைய குமாரன். கவிஞன் மகன் இறந்ததும் மன்னனது ஆணையால்; இராகவன் காடு

சென்றதும் சிற்றன்னை ஆணையால்; இராமன் காடு செல்வதைத் தசரதன் விரும்பவில்லை. அம்பிகாபதி இறப்பதைக் கவிஞன் விரும்பவில்லை. இராமன் காடு செல்வதை அறிந்தும் அதனைத் தடுக்கும் சத்தியற்றவனாய்த் தசரதன் புலம்புகிறான். அம்பிகாபதி இறப்பதை அறிந்துவைத்தும், தடுக்க வலிமையற்ற புலவன் புலம்புகிறான். அன்றியும், தான் தன் மகனிடம் கண்ட அருமைக் குணங்களையும், அன்பையும், அறிவையும் அறநெறி ஒழுக்கையும் கம்பன் இராமனிடமும் காண்கிறான். இவை அனைத்தும் இருவருக்கும் பொதுவாகும். ஆனாலும், கவிஞனுடைய புலம்பலை நாம் நேரே அனுபவிக்க வாய்ப்பு இல்லை. எனவே, தசரதனுட் புகுந்து கம்பன் புலம்புகிறான். இவ்வோர் இடம் மட்டும் கொண்டு இம்முடிபுக்கு வரத் தேவையில்லை. தசரதன் மாண்ட செய்தி கேட்டு அலறும் இராமன் வாக்கினின்றும் தன்னுடைய சோகத்தையே கொட்டுகிறான்; சடாயு புலம்பலிலும் தன் துயரையே பொழிகிறான். இந்திர சித்தனை இழந்த இராவணன் புலம்பலிலும் மண்டோதரியின் அரற்றலிலும், 'காட்டாயோ என்னுடைய கண்மணியைக் காட்டாயோ!' என்று அழுது அரற்றும் தானமாலை வாக்கினிலும் கம்பனுடைய வாழ்க்கையில் வருத்தம் நிறைந்த நெஞ்சப் பிழிவையே காணுகிறோம்.

## தசரதன் துயரம்

தசரதன் துயரைச் சற்று விரிவாகக் காணலாம்: மந்திரசபை முடிந்தவுடன் தசரதன் மகிழ்ச்சிக் கடலில் திளைத்திருக்கிறான். நீண்ட நாளாக அவன் கண்டு கொண்டிருந்த கனவு, பொழுது விடிந்தவுடன் நிறைவேறப் போகிறது. 'யாரேனும் அக்கனவு நனவாகாமல் தடுத்து விடுவாரோ!' என்று அவன் அஞ்சிக் கொண்டிருந்தது பொய்யாகிவிட்டது. இன்னும் சில மணி நேரங்களில் முடி சூட்டு விழா நடைபெறப் போகிறது. அது நடை

பெற்று விட்டால், பின்னர் அதனை விரும்பாதவர்களுங் கூட ஒன்றும் செய்ய இயலாது. நடைபெறு முன்னர் அதனைத் தடுக்கக் கூடியவர் அனைவருக்கும் தக்க வழியில் பாதுகாப்புச் செய்து விட்டான். எனவே, அவன் மகிழ்ச்சிக்குக் காரணம் இருக்கிறது. அரசர்கள் புடை சூழ அவன் இரவு நெடுநேரம் கழித்தே கைகேயியின் கோயில் புகுகிறான். இதுவரை அவளிடமும் அவன் இது பற்றிக் கூறவில்லை. அவன் மகிழ்ச்சிக்கு முழுவதும் எதிராக அங்கே அவன் காதலி படுக்கையிற்கூடக் கிடவாமல் கீழே விழுந்து புரண்டு கொண்டிருக்கிறாள். இந்த வேறுபாடு அவனை மருட்டி விட்டது. எனவே, 'மானை எடுக்கும் யானை' போல, அவன் தன் நீண்ட கைகளால் அவளை அப்படியே வாரி எடுக்கிறான். அவள் விசும்பிக் கொண்டு மீண்டும் கீழே விழுகிறாள். மன்னன் வருத்தம் எல்லை கடந்து விடுகிறது. வருத்தம் அச்சமாக வும் மாறி விடுகிறது. அருமை மனைவி இவ்வாறு இருந்ததை இதற்கு முன்னர் அவன் கண்டதும் இல்லை. எனவே,

> **'என்னை நிகழ்ந்தது? இவ்வேழு ஞாலம் வாழ்வார்**
> **உன்னை இகழ்ந்தவர் மாள்வார்! உற்றது எல்லாம்**
> **சொன்னபின் என்செயல் காண்டி; சொல்இது,' என்றான்**
> *(1499)*

இது கேட்ட அரசி, "பண்டைய இன்று பரிந்து அளித்தி" (1500) என்றாள். இதைக் கேட்டவுடன் அரசன் வருத்தம் எல்லாம் பறந்துவிடுகிறது. மீட்டும் மகிழ்ச்சி யில் திளைக்கிறான்; இராமனையும், முடிசூட்டலையும் நினைந்து. எனவே, வெடிசிரிப்புச் சிரிக்கிறான். அவன் மனத்தின் ஆழத்தில், 'கைகேயி தடை கூறுவாளோ முடிசூட்டு விழாவிற்கு!' என்று அஞ்சிக் கொண்டிருந்தான் போலும்! ஆனால், அவள் 'முன்னர்த் தருகிறேன் என்று கூறியதைக் கொடும்,' என்று கேட்டவுடன் முதலில்

அவனது அச்சம் நீங்கிவிடுகிறது. அதனால், ஒரு பெருஞ் சிரிப்புச் சிரித்தான் போலும்! அன்றேல், இத்தகைய சிரிப்புக்கு இங்குக் காரணமே இல்லை. சிரித்துவிட்டுப் பேசுகிறான்:

**கள்அவிழ் கோதை கருத்துஉண ராத மன்னன்**
**வெள்ள நெடுஞ்சுடர் மின்னின் மின்ன நக்கான்;**
**'உள்ளம் உவந்துள செய்வேன்; ஒன்றும் லோபேன்;**
**வள்ளல் இராமன்உன் மைந்தன் ஆணை,' என்றான்**

(1501)

இவ்வாறு மன்னன் கூறலும் கைகேயி, 'இமையோர் சான்றாக நீர் தந்த வரங்கள் இரண்டையும் தருக,' எனக் கேட்க, அரசன், 'தந்தேன்!' என்று கூறிவிடுகிறான். வரங்கள் யாவை என்று அறிந்தவுடன் அவன் படும்பாடு சொல்லும் தரத்ததன்று.

**சிந்தை திரிந்து திகைத்து அயர்ந்து வீழ்ந்தான்** (1514)

**'ஆ !கொடி யாய் !' எனும் ஆவிகாலும்; 'அந்தோ !**
**ஓ !கொடி தேஅறம்!' என்னும்; 'உண்மை ஒன்றும்**
**சாக' எனாஎழும்; மெய்தள் ளாடி வீழும்** (1515)

வீரர் அனைவர் வீரத்தையும் விழுங்க வல்ல வெற்றி வேல் மன்னன் கோழைகள் போலப் பேசத் தொடங்குகிறான்:

**'நாரியர் இல்லைஇஞ் ஞாலம் ஏழும் எண்ணக்**
**கூரிய வாள்கொடு கொன்று நீக்கி யானும்**
**பூரியர் எண்ணிடை வீழ்வன் !' என்று பொங்கும்**
**வீரியர் வீரம் விழுங்கி நின்ற வேலான்** (1516)

## வெற்றி வீரன் உள்ளமா?

வெற்றி வீரன் ஒருவன் மனத்தில் இத்தகைய எண்ணம் தோன்றுமா? உலகத்தில் உள்ள பெண்டிர் அனைவரையும் வாளால் வீசிக் கொன்றுவிட்டு அருநரகிடை வீழ்ந்து கிடக்கவும் முற்படுகிறான். இப்படி ஒரு வீரன் பேசுவ தென்றால், அவன் மனம் எவ்வளவு கெட்டுவிட்டது என்பதற்கு இதைவிட எடுத்துக்காட்டும் வேண்டுமா? எல்லையற்ற வருத்தமே தசரதனை இவ்வாறு நினைக்கவும் பேசவும் தூண்டுகிறது.

இதனையடுத்துத் தசரதன் மனநிலை கணந்தோறும் மாறுபடுகிறது. அம்மாறுபாட்டுக்கேற்ப, அவன் ஒரு முறை அவளைக் கெஞ்சுகிறான். ''உய்யேன் நங்காய்! உன் அபயம் என் உயிர்!'' என்கிறான் ஒருமுறை; *(1527)* அடுத்த கணத்தில்,

**இன்றோர் காறும் எல்வளை யார்தம் இறையோரைக்**
**கொன்றார் இல்லை! கொல்லுதி யோநீ கொடியாளே!**
*(1531)*

என்று அவளை ஏசுகிறான்; அடுத்த கணத்தில்,

**விண்ணோர் காறும் வென்ற எனக்குஎன் மனைவாழும்**
**பெண்ணால் வந்தது அந்தரம் என்னப் பெறுகேனோ?**
*(1534)*

என்று 'தன்னிரக்கம்' கொள்கிறான். ஒரு மனிதன் செய்யத் தகாதன காரியங்களுள் தலையாயது 'தன்னிரக்கம்'தான்.

**எற்றுஎன்று இரங்குவ செய்யற்க; செய்வானேல்**
**மற்றுஅன்ன செய்யாமை நன்று**

என்ற குறளும் இக்கருத்தை வலியுறுத்தவே தோன்றிற்று. சம்பராசுரனை வெற்றி கண்ட தசரதனா இவ்வாறு மாறி விட்டான்? இத்துணைப் பெரிய அவன் வீழ்ச்சியடையக்

காரணம் யாது? எத்துணைப் பெரிய இழிவு வந்துற்றாலும் மனிதன் தன் நிலை குலையாமல் இருப்பதன்றோ மனிதத் தன்மை?

**மலையே வந்து வீழினும் மனிதர்கள்!**
**நிலையி னின்று கலங்கப் பெறுதிரேல்**

(பொது, தனிக்குறுந்தொகை, 5)

என்று திருநாவுக்கரசர் பெருமான் கூறியதும்,

**இடுக்கண் வருங்கால் நகுக; அதனை**
**அடுத்தூர்வது அஃதொப்பது இல்** (குறள் 621)

என்று குறளாசிரியர் கூறியதும் தசரதனைப் பொறுத்த வரையிற் பொய்யாகி விட்டனவே! இந்த அளவுடன் அவன் நிற்கவும் இல்லை; சாதாரண மக்கள் நிலைமைக்கு இழிந்து விடுகிறான்; தன் மனைவி என்றும் பாராமல், "உன் அறுபட்ட தாலிக்கயிறு உன் மகன் மங்கல நாணாகப் பயன் படட்டும்!" என்றும் கூறத் தொடங்கி விட்டான்.

**பழிக்கு நாணாய் மாணாப் பாவி! இனிஎன் பல?உன்**
**கழுத்தில் நாண்உன் மகற்குக் காப்பு நாணாம் என்னா**

(1653)

அவன் கூறும்பொழுது கைகேயியின் மீது அவனுக்கு ஏற்பட்ட கோபத்தைவிட இராமன்மீது கொண்ட பாசத்தின் ஆழத்தை, உறுதியையே நாம் காண்கிறோம்.

## வேந்தன் புலம்பல்

கைகேயியிடம் தனியே இருக்கின்ற வரை அரசனுக்கு வாய்விட்டு அழவும் விருப்பமில்லை. இந்நிலையில் கோசலையும் வசிட்டனும் வந்துற்றனர். வசிட்டனே

கைகேயியை ஏசிவிட்டு இராமனை அழைத்து வருவதாகக் கூறுகிறான். இவர் இருவரையும் கண்டவுடன் தசரதன் வாய் விட்டே புலம்பத் தொடங்கிவிடுகிறான். ''அருமை மகனே, உன் முடி சூட்டு விழாவுக்கு நீராட்ட வந்த புனலைப் போய்க் கொண்டிருக்கும் என் வாயில் சற்று ஊற்றி விட்டுப் போகக்கூடாதா?'' என்கிறான்.

**.........................................'நின்மேற் சொரிய**
**மண்ணும் நீராய் வந்த புனலை மகனே! வினையேன்**
**உண்ணும் நீராய் உதவி உயர்கான் அடைவாய்' என்றான்**

**'உடையா மகுடம் புனைஎன்று உரையா வுடனே கொடியேன்**
**சடைமா மகுடம் புனையத் தந்தேன் அந்தோ!' என்றான்**
*(1660, 1661)*

*[உன்னை, மகுடம் புனைந்துகொள், என்று யானே கூறிவிட்டு உடனே சடைமுடியும் மரவுரியும் தந்தேனே!]*

**.........'தமியேன் என்னா என்னை இம்மூப்பு இடையே**
**வெறுத்தாய் இனி நான் வாழ்நாள்**
**வேண்டேன்! வேண்டேன்!' என்றான்** *(1662)*

*['என்னை இக்கிழப் பருவத்தில் விட்டுச் சென்று விட்டாய். ஆகலில், இனி யான் வாழ விரும்பவில்லை']*

**என்னின் முன்னம் வனம்நீ அடைதற்கு எளியேன் அல்லேன்**
**உன்னின் முன்னின் புகுவேன் உயர்வான் இனியான்** *(1663)*

*['என்னை விட்டு நீ வனம் புகுதற்கு முன்னரே அக் கொடுமையைக் காணாமல், யான் மோட்சம் அடைவேன்.']*

**'பொற்றோர் அரசே! தமியேன் புகழே! உயிரே! உன்னை,**
**பெற்றேன் அருமை அறிவேன் பிழையேன்! பிழையேன்!' என்றான்**
*(1665)*

*இத்தகைய இடங்களை வாய்விட்டு உரக்கப் படித்துப் பார்த்தாற்றான் இக்கவிதைகளின் உணர்ச்சிப் பெருக்கில் ஈடுபட முடியும். தசரதனுள் நுழைந்துகொண்டு கம்பனே அம்பிகாபதியை நினைந்து இப்படி பிரலாபிக்கிறான் என்பது தோற்றவில்லையா?*

*இன்னும் ஒரு வகை மனநிலையையும் கவிஞன் இப் பாடல்களிற் பெய்து வைக்கிறான். சிறந்த நிலைமையில் இருந்தவர்கள் திடீரென்று அந்நிலை கெட்டு அழிவதானால், அவர்கள்மாட்டு அன்புடையவர்கள் இப்புது நிலையைப் பார்க்க விரும்ப மாட்டார்கள். நல்ல நிலையில் வீட்டை விட்டு வெளியேறியவர்கள் அடிபட்டுக் கொடுமையான முறையில் இறந்துபட்டால், தாய்மார் போன்றவர்கள் அதனைக் காணச் சகியார்கள். இதுவும் உலகியலே. இம்மனநிலையையும் தசரதன்மாட்டு ஏற்றிக் கூறுகிறான் கவிஞன். முடி சூட வந்த இராகவன் சீரை புனைந்து காடு செல்ல முன் வந்த கோலத்தைக் காண எந்த அன்புடைய தந்தைக்குத்தான் மனம் வரும்? கட்டழகனாய் இருந்த அம்பிகாபதி, கதைகள் கூறுவது போல வெட்டுண்டு இறந்திருந்தால், எவ்வளவுதான் தத்துவம் உணர்ந்த கவிஞனாயினும் இக்கொடுமையைக் காணச் சகிக்குமா? இத்தகைய மனநிலை இதோ பேசப் படுகிறது:*

**'தகுதற்கு ஒத்த சனகன் தையல் கையைப் பற்றிப்**
**புகுதக் கண்ட கண்ணால் போகக் காணேன்!' என்றான்**

**'பூணார் அணியும் முடியும் பொன் ஆசனமும் குடையும்**
**சேணார் மார்பும் திருவும் தெரியக் காணக் கடவேன்,**

**மாணா மரவற் கலையும் மானின் தோலும் அவைதான்**
**காணாது ஒழிந்தேன் நன்றாய்த்து அன்றோ கன்றே' என்றான்**
*(1664, 1670)*

## காரணம் இதுவே போலும்

மேலே கூறிய பாடல்களில் கதைப்போக்கிற்கு ஏற்ற படி தசரதன் புலம்புகிறான் எனினும், அப்புலம்பலின் ஆழத்தில் கவிஞனின் அவலக் குரலேதான் கேட்கிறது. இதிலிருந்து சற்றும் எதிர்பாராத ஓர் உண்மை புலப்படு கிறது. மந்தரை சூழ்ச்சிப் படலத்தில் கைகேயியைக் கற்புக் கரசியாகவும், கருணைக் கடலாகவும் பேசிய அக்கம்ப நாடனே கைகேயி சூழ்வினைப் படலத்தில் அளவு மீறி அவளை ஏசி வெறுப்பதன் காரணமும் ஒருவாறு விளங்கு கிறது. முதலில் கைகேயி என்னும் பாத்திரத்தை உண்டாக்கி அதன் பண்பாட்டில் ஈடுபட்டு அவளைப் புகழ்கிறான் கவிஞன். ஆனால், பிற்பகுதியை பாடிக் கொண்டு செல்கையில் அவனையும் அறியாமல் மகனை இழந்த தந்தையின் துயரத்தில் கவிஞன் தன் சுயசரிதையைக் காண்கிறான். தன்னைப் போலவே தசரதனும் வருந்துகிறான் என்பதைக் கவிஞன் உணரத் தலைப்பட்டவுடன் அவ்வுணர்ச்சி அவனையும் மீறி எழுகிறது. அவன் படைத்த பாத்திரங்களைச் செயல் செய்ய ஏவுவதை விட்டு, அவன் அவர்கள் உணர்ச்சியைப் பங்கிட வேண்டிய நிலைக்கு ஆளாகிறான். இந்நிலையில் தசரதனுக்குத் தந்தை அன்பு குறுக்கிடுகிறது. அவ்வன்பு இராமனிடம் செல்ல முடியாமல் தடுப்பவள் கைகேயிதானே? எனவே, அவளை அவன் முறை திறம்பி யும் ஏச முடிகிறது. தசரதன் மனநிலையை இப்பொழுது கவிஞனும் பெற்றுள்ளான். அம்பிகாபதியிடம் அவன் அன்பு செல்ல வொட்டாமல் தடை செய்த மன்னன் மேல் வெறுப்பு முற்றுகிறது. அரசன்மேல் குற்றம் இல்லை;

அவன் அக்காலச் சமுதாயப் போக்கிற்கேற்றபடி செய்தான் என்பதை நாம் அறிவோம். ஆனால், தந்தையின் மனம் அவ்வாறு நினைக்குமா! அதேபோலக் கைகேயி முறையைத்தான் செய்தாள் என்பதை நாம் அறிகிறோம். ஆனால், தசரதன் இவ்வாறு நினைக்க முடியுமா? அன்பு மிக்கவிடத்துப் பிழை காண்டல் இயலாதன்றோ? இதனாலேயே தசரதனுட்புகுந்து புலம்புகிற கம்பநாடன் அத்தசரதனுக்குப் புத்திரசோகம் உண்டாக்கிய கைகேயியை வாயாரத் திட்டுகிறான், முதற் படலத்தில் அவளைப் புகழ்ந்ததையும் மறந்துவிட்டு. எனவே, அயோத்தி வேந்தன் வாழ்வு வருந்தத் தகுந்த ஒரு முடிவை அடைந்ததிலும் கவிஞன் தன்னையே காண முடிகிறது போலும்! இத்தகைய ஒரு துன்ப அனுபவமே கவிஞன் குழந்தைச் செல்வத்தில் ஈடுபட்டுப் பாடாமைக்குக் காரணம் என்று முடிவு கட்டுவது சரிதானே?

# 3. அரசியல்

## கம்பன் காட்டும் அரசியல் நெறிகள்

இதுவரை 'மன்னன்' என்ற தலைப்பில் தசரதனைப் பற்றியும் அவனுடைய செயல்கள் பற்றியும் கம்பன் கூறிய முறையை ஒருவாறு கண்டோம். காப்பியத்தோடு தொடர்புடையவன் ஆனதாலும் வான்மீகி அடியொற்றிச் செல்லவேண்டிய சூழ்நிலை இருந்தமையாலும் மன்னன் என்பவன் பற்றியும் அவனுடைய அரசியல் எவ்வாறு அமைய வேண்டும் என்பது பற்றியும் தான் நினைத்ததைக் கூற இந்தப் பகுதியில் கம்பனுக்கு வாய்ப்பு ஏற்படவில்லை. பல்லவ மன்னர்கள் அமைச்சர்களுக்கு உரிய இடம் தந்ததாக வரலாற்றிலிருந்து அறிய முடியவில்லை. ஆனால் வள்ளுவன் வழிவந்த கம்பநாடன் ஓர் அரசன் நல்லாட்சி நடத்தவேண்டுமானால் எத்தகைய அமைச்சர்கள் அவனிடம் இருக்கவேண்டும் என்பதைப் பற்றியெல்லாம் நன்கு அறிந்திருந்தான். தசரதன் ஆட்சியைப் பற்றிப் பேசும்போது அவனுடைய அமைச்சர்கள் எத்தகையவர்கள் என்பதை மந்திரப் படலத்தில் 1318 முதல் 1322 வரையுள்ள ஐந்து பாடல்

களில் விரிவாகப் பேசுகிறான். இந்த ஐந்து பாடல்களும் திருக்குறளை அடியொற்றியே விரித்துப் பேசுகின்றன. 1318ஆவது பாடலில் இவ்வமைச்சர்கள் மாபெரும் கல்வியாளர்கள் என்றும், சிறந்த அறிஞர்களென்றும் கூறுவதோடு அரசன் சினத்தைப் பொருட்படுத்தாமல் நடுவுநிலைமையையே எடுத்துக் கூறுபவர்கள் என்றும் கூறுகிறான். மேலும் வஞ்சனையை அறவே ஒழித்து அறநெறியில் நிற்பவர்கள் என்றும் பேசுகிறான். மூன்று காலத்தையும் அறியவல்லவர்கள் என்றும் வினைப் பயனால் ஒரு தீமை நேரிடினும் அதைப் போக்கவல்ல ஆற்றலுடையவர்கள் என்றும் 1319ஆவது பாடலில் கூறுகிறான். ஏனைய பாடல்களில் கருவி, இடம், காலம் என்பவற்றை நன்கறிந்து செயலாற்ற வல்லவர்களென்றும் தன்னலமோ தம் உயிர்மாட்டுப் பற்றோ இல்லாதவர் களென்றும் அரசனுடைய சினத்தையும் தாங்கிக் கொண்டு அவனுக்கு நல்லதையே செய்யும் இயல்புடைய வர்கள் என்றும் கூறுகிறான். இந்த ஐந்து பாடல்களில் அமைச்சர்களின் இலக்கணத்தை உலகப் பொதுமறை தந்த வள்ளுவப் பேராசான் கூறியவற்றையே தொகுத்தும் வகுத்தும் பேசுகிறான். தசரதனுடைய ஆட்சியில் வசிட்டன் ஒருவனைத் தவிர வேறு யாருக்கும் செல்வாக்கு இருந்ததாகத் தெரியவில்லை. அப்படியிருக்க கம்பநாடன் இத்துணை விரிவாக அமைச்சர்களைப்பற்றிப் பேசியது தமிழ்நாட்டில் எதிர்காலத்தில் கால் ஊன்றப்போகும் சோழ மன்னர்கள் எவ்வாறு நடந்து கொள்ளவேண்டும் என்று அவன் விரும்பியதையே காட்டிச் செல்கிறது.

இராம காதையைப் பொறுத்தமட்டில் அதிற் காணப் படும் மற்றொரு பேரரசனாகிய இராவணனும் அமைச்சர் களைப் பற்றி அதிகம் கவலைப்பட்டதாகத் தெரிய வில்லை. இராவணனுடைய மந்திர ஆலோசனை சபையில் அவன் செய்த தவற்றை எடுத்துக் காட்டும் அமைச்சன் ஒருவன்கூட இல்லை. அதற்குப் பதிலாக

அவன் செயலை ஏற்றுக் கொண்டு போருக்குப் புறப்படுவதுதான் சரி என்று கூறும் அமைச்சர்களே நிறைந்திருந்தனர். அவன் செயல் தவறு என்று எடுத்துக் காட்டியவர்கள் வீடணனும் கும்பகர்ணனுமேயாவர். அதை ஏற்றுக்கொள்ளாத இராவணன் நீங்கள் என்ன அமைச்சர்களா என்று கேட்கிறான். எனவே அறிவுரை கூறவேண்டிய கடமை அமைச்சர்களுடையது என்பதை இராவணன் நன்கறிந்திருக்கிறான். ஆனால் அவனால் நியமிக்கப்பட்ட அமைச்சர்கள் அனைவரும் துதிபாடிகளா இருந்துவிட்ட காரணத்தால் அமைச்சின் பயனை இராவணன் அடைய முடியாமல் போய்விட்டது. அமைச்சர்களே அரசனின் கண்களாக இருத்தலின் அமைச்சர்களைத் தேர்ந்தெடுக்கும் போது நன்கு ஆராய்ந்து அவர்களைப் பதவிகளில் அமர்த்த வேண்டும். இராவணன் இதனைச் செய்யவில்லை.

தசரதனது அமைச்சர்கள் கூட, இராமனுக்கு முடிசூட்ட வேண்டும் என்ற தசரதனது திடீர் முடிவை ஏன் என்று கேட்கவில்லை. அமைச்சர்களிடம் தன் கருத்தைத் தெரிவித்த தசரதன் உடனடியாக சுமந்திரனை அனுப்பி இராமனை வரவழைத்தது சரியா? வந்த மகனிடம் 'முடிசூட்டிக் கொண்டு எனக்கு ஓய்வு தர வேண்டும்' என்று கட்டளையிடாமல் பதினான்கு பாடல் களில் மகனிடம் கெஞ்ச வேண்டிய சூழ்நிலை என்ன? என்று இதையாவது அந்த அமைச்சர்கள் கேட்டு இருக்க வேண்டும். எனவே தசரதனைப் பொறுத்தமட்டில் கடமை தவறாத அமைச்சர்கள் கூட செம்மையாகத் தொழிற்பட வில்லை என்று அறிய முடிகிறது.

'ஏன் இத்துணை அவசரம்?' என்று கேட்கும் அமைச்சர்கள் தசரதனிடமும் 'நீசெய்தது தவறு' என்று எடுத்துச் சொல்லும் அமைச்சர்கள் இராவணனிடமும் இருந்திருந்தால் இராமகாதையே மாறியிருக்கும்.

ஒன்பதாம் நூற்றாண்டில் தமிழகத்தின் நிலை இதுதான் என்று நினைக்க வேண்டியுள்ளது.

பல்லவ மன்னன் மகேந்திர வர்மனிடம் அமைச்சர்களாக இருந்தவர்களும் கடமை தவறியவர்களே என்று திருநாவுக்கரசர் புராணத்தில் சேக்கிழார் குறிப்பிடுகிறார். சமணத்திலிருந்து சைவத்திற்கு மாறிவிட்டார் நாவுக்கரசர். தனியொரு மனிதன் சமயம் மாறுவதால் உலகம் நின்றுவிடாது. அந்தச் சமய மாற்றத்தால் பாதிக்கப்பட்டவர்கள் சமணத் துறவிகளே தவிர மன்னன் மகேந்திர வர்மன் அல்லன். அப்படி இருந்தும் அத்துறவிகளின் சொல்லைக் கேட்டு நாவுக்கரசரைத் தண்டிக்க முற்படுகிறான் பல்லவ மன்னன். இதைத் தட்டிக் கேட்கும் அமைச்சர்களும் அவனிடமில்லை. பாண்டியன் செய்தது தவறு என்று இடித்துக் கூறும் அமைச்சர்கள் நெடுஞ்செழியனிடமும் இருந்ததாகத் தெரியவில்லை. இவற்றையெல்லாம் மனத்துக் கொண்ட கம்பநாடன் மிக விரிவாக அமைச்சர்களின் இலக்கணம் கூறியது முற்றிலும் பொருத்தமுடையதேயாகும்.

தமிழ்க் காப்பியங்கள் என்று எடுத்துக் கொண்டு பார்த்தால் கம்பனைத் தவிர வேறு யாரும் அமைச்சர் பற்றி விரிவாகப் பாடவில்லை. வடமொழியும் தமிழ் மொழியும் நன்கு அறிந்து தன் காலம் வரையிலுள்ள வரலாற்றையும் நன்கு அறிந்திருக்கிறான் கம்பன். மகேந்திர வர்மன், இராசசிம்மன் முதலிய பேரரசர்கள் தோன்றியுங்கூடப் பல்லவ சாம்ராஜ்ஜியத்தை நிலை கொள்ளச் செய்ய முடியவில்லை. தெள்ளாறு எறிந்த நந்திவர்மன் தூக்கிநிறுத்த முயன்றும் வைரமேகனோடு பல்லவ சாம்ராஜ்ஜியம் சரிந்து விட்டது. இவற்றையெல்லாம் நன்கறிந்திருந்த கம்பநாடன் பல்லவ மன்னர்களும் அரசர்க்குரிய இலக்கணத்தைப் பெறவில்லை, அரசியலையும் நன்கறிந்திருக்கவில்லை; எனவேதான் இந்த

வீழ்ச்சி ஏற்பட்டது என்பதை அறிகின்றான். இதுவரை ஆண்ட பல்லவர்கள் தமிழர்கள் அல்லர் என்பதையும், அவர்கள் தமிழ்நாட்டை ஆண்ட 300 ஆண்டுகளில் இந்த இனத்தையும் இந்த இனத்தின் நாகரிகம், பண்பாடு ஆகியவற்றையும் அறிந்திருக்கவில்லை; அறிந்து கொள்ள முயலவுமில்லை என்பதையும் அறிகிறான். எனவே நுண்மாண் நுழை புலமும் தீர்க்கதரிசனமும் உடைய கவிச்சக்கரவர்த்தி பல்லவ மன்னர்களின் குறைபாடுகள் தலையெடுத்துக் கொண்டிருக்கும் சோழரிடம் இருக்கக் கூடாது என விரும்புகிறான். எனவேதான் தான் இயற்றும் காப்பியத்தில் வாய்ப்பு நேரும் போதெல்லாம் ஒரு நல்ல அரசு எப்படி அமைய வேண்டும், அமைச்சர்கள் எப்படி அமைய வேண்டும், அரசன் எத்தகையவனாக இருக்க வேண்டும் என்பவற்றையெல்லாம் அங்கங்கே பேசுகிறான். தசரதனுடைய மந்திர ஆலோசனையில் அமைச்சர் இலக்கணம் பேசிய கம்பநாடன் அடுத்தபடியாக அரசன் இலக்கணத்தைத் தசரதன் மேலேற்றிக் கூறுவதை 'மன்னன்' என்ற தலைப்பில் முன்னர்க் கண்டோம்.

'வறிஞன் ஓம்பும் செய் எனக் காத்து அரசு செய்கின்றான்' என்ற அற்புதமான உவமை மூலம் தசரதன் எத்தகைய மன்னன் என்பதைக் கவிஞன் விளக்கி விடுகிறான். ஒன்பதாம் நூற்றாண்டு அரசியலில் மன்னர்கள் மக்கள் விருப்பத்தை நன்கறிந்து அதற்கு ஏற்றபடி ஆட்சி செய்கிறார்களா என்ற வினாவைக் கம்பன் எழுப்பிக் கொள்கிறான். இந்த நிலையில் இரண்டாயிரம் ஆண்டுகளாக மக்கள் அனைவருக்கும் மன்னனே உயிராவான் என்ற கருத்து தமிழகத்தில் வேரூன்றி விட்டது. உடலில் உயிர் தங்கியிருப்பினும் உடலுக்குத் தன்னிச்சையாகத் தொழிற்படும் இயல்பு இல்லை. உயிர் விருப்பத்திற்கேற்ப உடல் இயங்க வேண்டிய சூழ்நிலை என்றுமே உள்ளதாகும். இன்றைய

மன்னன் உயிர் என்றும், மக்கள் உடல் என்றும் உவமை கூறினால் அதன் பொருள் என்ன?— மன்னன் விருப்பப்படி உடலாகிய மக்கள் இயங்கவேண்டுமே தவிர மக்கள் விருப்பப்படி மன்னன் இயங்கும் நிலை இல்லை. இந்த ஒன்பது நூற்றாண்டுகளில் மன்னன் உயிர் என்ற கருத்திற்கு யாரும் மறுப்புக் கூறவில்லை. இன்னும் சொல்லப் போனால் பன்னிரண்டு, பதின்மூன்று நூற்றாண்டு வரை இந்த நிலைதான் நீடித்து இருந்தது என்பதைத் தமிழ் இலக்கியங்கள் மூலம் அறிய முடியும். இந்த நீண்ட நெடிய வரலாற்றில் ஒன்பதாம் நூற்றாண்டில் தோன்றிய கம்பன் மிக நுணுக்கமாக ஒரு புரட்சியைச் செய்கிறான்.

''தாய் ஒக்கும் அன்பில்'' என்று கூறி அடுத்துத் ''தவம் ஒக்கும்'' என்றுங் கூறுவதால் மிகச் சிறந்த உவமைகளைத் தசரதனுக்கு ஏற்றுகிறான் என்பதில் ஐயமில்லை. இவற்றையடுத்து மற்றோர் உவமை கூற விரும்பி அந்த உவமையின் மூலமே ஒரு மாபெரும் புரட்சியைச் செய்து விடுகிறான் கவிஞன். அந்தக் கவிதை வருமாறு:

**'வயிரவான் பூண் அணி மடங்கல் மொய்ம்பினான்,**
**உயிர் எலாம் தன் உயிர் ஒக்க ஓம்பலால்**
**செயிர் இலா உலகினில், சென்று, நின்று, வாழ்**
**உயிர் எலாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினான்'** *(177)*

இந்தப் பாடற் கருத்து பற்றி முன்னரே ஓரளவு கூறியிருப்பினும் மீண்டும் இங்கே சற்று விரிவாகக் காணலாம்.

மேலோட்டமாகப் பார்க்கின்ற பொழுது உலகிலுள்ள எல்லா உயிர்களையும் தன் உயிர் போல நேசித்துக் காத்தான் என்ற பொருள் விளங்கும். இதனையடுத்து வரும் மூன்று நான்காம் அடிகளில் இக்கருத்தை வலியுறுத்தத் தொடங்கி ஒரு புதுமையைப் புகுத்துகிறான்.

கவிஞன். இவ்வடியின் பொருள் 'குற்றமில்லாத உலகத்தி லுள்ள சேதன, அசேதன உயிர்கள் அனைத்தும் தங்கி வாழ்வதற்குரிய உடம்பாக மன்னன் (தசரதன்) இருந்தான்' என்பதாகும். இதில் என்ன புதுமை இருக்கிறது என்று கேட்கத் தோன்றுகிறதல்லவா? இந்த இடத்தில் இயக்கும் கர்த்தா உயிர் என்பதையும் இயங்கும் பணியாள் உடல் என்பதையும் மனத்துள் கொள்ள வேண்டும். இந்தக் கருத்துடன் பின் இரண்டு அடிகளை மறுபடியும் பார்த்தால் உண்மை விளங்கும். தசரத மன்னன் தன் நாட்டில் வாழும் எல்லா உயிர்களும் எதனை விரும்பு கின்றனவோ அதனைச் செய்து முடிக்கும் உடம்பாக (பணியாளனாக) இருக்கிறான். இப்படிப் பார்க்கும் பொழுது தசரதன் தனக்கு என்று, தன்னல அடிப்படையில் எதனையும் செய்வதில்லை என்பதும் உயிர்கள் எதனை விரும்புகின்றனவோ அதனை மட்டும் செய்து முடிப்பவன் என்பதும் விளங்கும்.

பிற்காலத்தில் மேலை நாடுகளில் குடியாட்சித் தத்துவம் தோன்றியபொழுது, 'குடியாட்சி என்பது மக்களால், மக்களுக்காகவே, மக்களே நடத்தும் அரசாட்சி ஆகும்' என்று விளக்கம் தரப்பட்டது. இந்த விளக்கத்தில் மக்கள் என்பதற்கு பதிலாக உயிர்கள் என்ற சொல்லைப் போட்டால் கம்பன் பாடலின் மூன்று நான்காவது அடிகளின் பொருட்சிறப்பு நன்கு விளங்கும். மேலை நாட்டாரின் இந்தக் குடியாட்சி வழக்கத்தில் ஒரு குறை உண்டு என்பதை மறப்பதற்கில்லை. ஆறறிவு படைத்த மக்கள் மட்டும் குடியாட்சித் தத்துவத்தில் இடம்பெறு கிறார்களே தவிர ஓரறிவு உயிர் முதல் ஐந்தறிவு பெற்றுள்ள விலங்குகள் வரை இத்தத்துவத்தில் விடப்பட்டு விட்டன. ஆனால் ஒன்பதாம் நூற்றாண்டில் குடியாட்சித் தத்துவத்தைக் கற்பனையில் கண்ட கம்பநாடன் இந்த ஐந்து வகை உயிர்களையும் மக்கள் கூட்டத்தில் சேர்த்துக் கொள்கிறான். ஓரறிவு படைத்த மரங்கள் முதலியவை

நடமாட்டமில்லாத நிலையியல் உயிர்களாகும். இதனைக் கம்பன் 'நின்று வாழ் உயிர்' என்று பேசுகிறான். விலங்கு, பறவை முதலியன ஐந்து அறிவு படைத்தவையேனும் அவை இயங்கும் இயல்புடையன. அவையும் மக்கள் கூட்டத்துள் சேர்க்கப்பட்டு 'சென்று வாழ் உயிர்கள்' என்ற தொகுப்பில் இடம் பெறுகின்றன. 'சென்று நின்று வாழ் உயிர் எல்லாம் உறைவது ஓர் உடம்பும் ஆயினான்' என்ற அடியின் மூலம் தசரதனாகிய உடம்பு மக்கட் விருப்பத்தை மட்டுமல்லாமல் தாவரங்கள், விலங்குகள் என்பவற்றின் நலனையும் விருப்பத்தையும் கொண்டு செலுத்தும் உடம்பாக உள்ளான் என்று கவிஞன் கூறும் பொழுது இருபத்தோராம் நூற்றாண்டில் கூட குடியாட்சிக்காரர்கள் கற்பனை செய்ய முடியாத உயரத்தைக் கவிஞன் எட்டிவிடுகிறான். கம்பநாடன் கண்ட கற்பனை உலகில் அரசன் எப்படியிருக்க வேண்டும் என்பதை மேலே கண்ட சில பாடல்களின் மூலம் அற்புத மாக விளக்கிவிடுகிறான். பாலகாண்டத்தில் நாடு, அரசன், அமைச்சர் என்ற மூன்று பற்றிய கம்பனின் கருத்தோவியம் இடம் பெற்றதை நன்கு அறியமுடிகிறது.

எத்துணைச் சிறந்த அரசனாயினும் எவ்வளவு நல்ல குறிக்கோளுடன் அவன் இருப்பினும் சமுதாயத்தில் ஒன்றி ஊடாடி வாழும்பொழுது நடைமுறையில் பல சிக்கல்கள் தோன்றத்தான் செய்யும். இச்சிக்கல் எதிர்ப்படும் பொழுது அவற்றை அலசி ஆராய்ந்து ஒரு முடிவிற்கு வருவதே சிறந்த அரசியல் எனப்படும். அரசன் என்பவன் தனி மனிதன். அவனுக்கு என்று சில விருப்பு வெறுப்புக்கள் இருக்கத்தான் செய்யும். சமுதாய மக்கள் விருப்பு வெறுப்புக்களுடன் இத்தனி மனிதனுடைய விருப்பு வெறுப்புக்கள் உறழும்பொழுது அதன் முடிவு எதுவாக இருக்கும்? தனி மனிதனாகிய அரசன் கையில் எல்லையற்ற அதிகாரங்கள் குவிந்து கிடக்கின்றன. அதிகாரத்துடன் கூடிய அவனுடைய விருப்பு வெறுப்புக்கள் மக்களுடன்

உறழும்பொழுது எத்தகைய முடிவைத் தரும்? இந்த இரண்டின் உறழ்ச்சியே அரசியல் எனப்படும்

இந்த அரசியலின் சிறப்பு, தனித்தன்மை, இன்றியமை யாமை ஆகியவற்றை நன்குணர்ந்து கொண்ட கம்ப நாடன் அரசியற் படலம் என்ற தலைப்பில் இரண்டு படலங்களைப் பாடுகிறான். பால காண்டத்தில் வரும் அரசியற் படலம் கவிஞன் தன் கருத்தாக அரசியலைப் பற்றிக் கூறும் இடமாகும். கிட்கிந்தா காண்டத்தில் வரும் அரசியற் படலம் கவிக் கூற்றாக அமையாமையால் காப்பிய நாயகனான இராகவன் கூற்றாக அமைந் துள்ளது. இந்தப் பகுதி ஈடு இணையற்றவனும் நடையில் நின்று உயர் நாயகனும் ஆகிய இராகவன் சராசரி மனிதனாகிய சுக்கிரீவனுக்கு அரசியல் என்றால் என்ன? என்று எடுத்து விளக்கும் பகுதியாகும்.

பத்துப் பாடல்களில் (4122—4131) இராகவன் அரசியல் மாட்சியை சுக்கிரீவனுக்கு எடுத்து விளக்கு கிறான். இந்தப் பத்துப் பாடல்களையும் விரிவாக ஆழ்ந்து சிந்தித்தால் கம்பநாடனின் அரசியல் கருத்து நமக்கு நன்கு விளங்கும். இதனைக் கூறியவன் இராகவனாயினும் கூறப்பட்டவன் சுக்கிரீவன் ஆவான். சுக்கிரீவன் தசரதனைப் போலவோ இராகவனைப் போலவோ மக்கள் நிரம்பிய நாட்டை ஆட்சிச் செய்பவன் அல்லன். விலங்கு களாகிய குரக்கினத்திற்குத் தலைவன். மனிதர்களுக்குரிய சட்டதிட்டங்கள், ஒழுகலாறுகள், வாழ்க்கை முறைகள், குறிக்கோள்கள் ஆகியவை குரங்குச் சமுதாயத்திற்கு செல்லுபடியாகாது என்று வாலி முன்னரே இராமனிடம் கூறியதாகக் (4046— 4047) கம்பன் பாடியுள்ளான். அப்படியிருந்தும் மனிதர்களின் அரசியல் பற்றி சுக்கிரீவ னிடம் இராமன் கூறுவதாகக் கம்பன் பாடுவது ஏன்?

பல்லவப் பேரரசு வீழ்ச்சி அடைந்து சோழப் பேரரசு தொடங்குகின்ற நிலையில் இம்மண்ணிடைத்

தோன்றியவன் கம்பநாடன். சோழப் பேரரசு தமிழரசர்களின் குடையின் கீழ் அமையப் போவதாகும். ஆகவே அந்த அரசு எப்படியமைய வேண்டும் என்பதை ஒரு வரைபடம் மூலம் விளக்க விரும்புகிறான் கம்பநாடன். அதற்குரிய வாய்ப்பான இடம் கிட்கிந்தா காண்டமாகும். பல்லவப் பேரரசு வீழ்ந்தது போல வாலி வீழ்ந்து விட்டான். சோழப் பேரரசு தலையெடுப்பது போல, சுக்கிரீவன் ஆட்சி தொடங்குகிறான். இந்த நிலையில் புதிதாக வரும் அரசன் எவ்வாறு ஆட்சி செய்ய வேண்டும் என்பதைக் கூறுவது போல இப்பகுதியை அமைத்து விட்டான். இதைச் சற்று விரிவாகக் காண்பது பயனுடையது ஆகும்.

அரசியல் நெறி கூறப் புகுந்த இராகவன் திருக்குறளின் பல அதிகாரங்களை உள்ளடக்கி ஒரு பாடலாக முதற் பாடலில் வெளிப்படுத்திக் கூறுகின்றான்:

**வாய்மை சால் அறிவின் வாய்த்த மந்திர மாந்தரோடும்**
**தீமை தீர் ஒழுக்கின் வந்த திறத் தொழில் மறவரோடும்**
**தூய்மை சால் புணர்ச்சி பேணி,துகள் அறு தொழிலை ஆகி**
**சேய்மையோடு அணிமை இன்றி,தேவரின் தெரிய நிற்றி** (4122)

இப்பாடலின் பொருள் ஆழ்ந்து சிந்திக்கத் தக்கதாகும். ஓர் அரசனுக்கு அமைச்சர்கள் கண் போன்றவர்கள். மந்திரக் கிழவர்கள் என்ற பெயரை இவர்களுக்கு வழங்கும் பொழுது கம்பன் இருபொருள்படக் கூறுகிறான். அரசனின் மந்திராலோசனைக்கு உரியவர்கள் என்பது ஒரு பொருள். மந்திரம் என்ற சொல்லுக்கு இரகசியம் என்ற ஒரு பொருளுமுண்டு. எனவே இந்த அமைச்சர்கள் இரகசியத்தைக் காக்கின்றவர்கள் என்ற பொருளும் இச் சொல்லில் அடங்கியிருக்கக் காணலாம். இன்று கூட அமைச்சர் பதவியில் நியமிக்கப்படுகின்றவர்கள் இரகசியக்

காப்புப் பிரமாணம் என்ற ஒன்றை எடுத்துக் கொள்வதை நாம் அறிவோம். இந்த மந்திரக் கிழவர்களுக்கு மற்றோர் இன்றியமையாத பண்பையும் இராகவன் முதலில் கூறுகிறான்: வாய்மை சால் அறிவு என்பதாகும் அது. அமைச்சர்களுக்கு நுண்மையான அறிவு தேவையென்பதை யாவரும் அறிவர். ஆனால் நுண்மையான அறிவு என்பது இருபுறமும் கூர்மையான வாள் போன்றதாகும். இந்தக் கூர்மையான அறிவு எதிர்காலத்தைக் கணித்தறியப் பயன்படுவதாகும். இவ்வாறு கணித்துக் கண்ட செய்தி களைக் கையூட்டுப் பெற்றுக்கொண்டு பகைவர்களிடம் தெரிவிக்கின்ற அமைச்சர்களாக இருந்துவிட்டால் என்ன செய்வது? இதைவிடப் பெரிய ஆபத்து வேறொன்றும் இல்லை. இன்றுகூட சில நாடுகளில் இத்தகைய நிகழ்ச்சிகள் நடைபெறுவதையறிய முடிகிறது. இதைத் தடுப்பதற்கு வாய்மை ஒன்றினால்தான் முடியும். சிறந்த அறிவுடைய அமைச்சர்கள் தம் அரசனுக்குப் பயன்பட வேண்டுமானால் அவர்களுடைய அறிவு வாய்மையுடன் கலந்ததாக இருக்க வேண்டும். இப்படிக் கலப்பதிலும் அரைகுறையாகக் கலந்திருந்தால் பயனில்லை. ஒரு சமயம் இல்லாவிட்டாலும் மற்றொரு சமயம் இவர்கள் மன்னனை ஏமாற்றிவிடுவார்கள். ஆகவே 'வாய்மை சால்' என்ற சொல்லைப் பயன்படுத்துவது மூலம் வாய்மை நிறைந்த, அதாவது வாய்மையினின்றும் பிறழாத அறிவோடு கூடிய அமைச்சர் என்று பேசுகிறான் கம்ப நாடன். பாடலின் முதலடியில் அறநிலை பிறழாத அறிவு நிரம்பிய அமைச்சர்களின் துணை வேண்டும் என்று கூறிய கவிஞன் இரண்டாவது அடியில் அரசனுக்கு மிகத் தேவையான மற்றோர் உறுப்பையும் கூறுகிறான். படைவீரர்கள் படைத் தலைவர்கள் என்பவர்கள் எத்தகையவர்களாக இருக்க வேண்டும் என்று கூற வந்த கவிஞன் அவர்கட்கும் இரண்டு இயல்புகளைக் கற்பிக் கிறான். நல்லொழுக்கம் என்று கூறாது தீமையினின்று நீங்கிய ஒழுக்கம் என்று கூறுவது சிந்திக்கத் தக்கது. தம்

தலைவனாகிய அரசனுக்குத் தீமை புரியாத வாழ்க்கை முறை உடையவர்களாக இருத்தல் வேண்டும். படை வீரர்கள் செய்யும் செயல்கள் பிறர், 'இவை நல்லொழுக்க மல்ல' என்று கூறக் கூடியதாகக் கூட இருக்கலாம். அச் செயல்கள் தம் அரசனுக்கு நலம் பயக்க வேண்டுமென்பதே குறிக்கோளாகும். இனி, தீமை தீர்ந்த இவ்வொழுக்கத் தோடு திறத்தொழில் மறவர்களாக அவர்கள் இருத்தல் வேண்டும். அதாவது போர்க்கலையில் திறமுடையவர் களாக இருத்தல் வேண்டும். அத்தகைய படைஞர், படைத்தலைவர், வேண்டுமெனக் கவிஞன் கூறுவதைச் சற்று நின்று கவனிக்க வேண்டும். வாய்மை சால் அமைச்சரை முதலில் கூறி தீது தீர் படைஞரை இரண்டா வதாகக் கூறியதன் நோக்கமென்ன? முதலில் குறிப்பிடப் பட்டவர்கள் அறிவு ஜீவிகள் (Intellectuals) எனப்படு பவர்கள். இரண்டாவது பேசப்பட்டவர்கள் உடல் வலிமையை நம்பி வாழ்பவர்கள். ஓர் அரசனுக்கு இவ்விரு வகையினரும் இன்றியமையாத உறுப்புக்களாவர். என்றாலும் உடல் வலிமையை விட அறிவுப் பலன் முக்கியமானதாதலின் அதனை முதலில் கூறினார்.

ஒரு சமுதாயத்தின் தலைவனாகிய அரசன் மேலே சொல்லப்பட்ட இரு வகையினரை மட்டும் வைத்துக் கொண்டால் போதுமென்று நினைப்பது தவறு. அன்றாட வாழ்க்கையில் பலதரப்பட்ட மக்களோடும் பழக வேண்டிய கடப்பாடுயுடையவன் அரசன். அப்படிப்பட்ட மக்களோடு பழகும்போது எத்தகையவர்களிடம் நெருங்கிப் பழகுவது என்ற வினாத் தோன்றும். அதற்கு விடையாக மூன்றாவது அடியின் முதற் பகுதியில் மனம், மொழி, மெய்களில் தூய்மை உடையவர்களோடு ஏற்படும் புணர்ச்சியை பேணிக் காப்பாற்ற வேண்டும். இவ்வாறு கூறுவதால் தூய்மையற்றவர்களைக் காண நேர்ந்தால் அவர்கள் சொல்வதைக் கேட்டுவிட்டு அவர்களோடு மேலும் தொடர்பு கொள்ளாமல் அப்படியே விட்டு விட

வேண்டும் என்கிறான். அடுத்துச் சொல்லப்பட்டது மிக முக்கியமானதாகும். துகள் அறு தொழிலை ஆகி—குற்றமற்ற தொழிலை செய்து என்பது இதன் நேரடிப் பொருளாகும். தொழிலில் துகள் உடை தொழிலென்றும், துகள் அறு தொழிலென்றும் இரு வகையுண்டா? ஒருவன் தன் விருப்பத்தைப் பூர்த்தி செய்வதால் பிறர் பாதிக்கப்படு வார்களா என்பதை ஆராயாமல் செய்வது துகள் உடை தொழிலாகும். பல பொறுப்புக்களையுடைய அரசன் சில காரியங்களைச் செய்யும் பொழுது அதனால் சிலர் பாதிக்கப்படவும் கூடும். அப்படியானால் என்ன செய்வது? பலருடைய நன்மை கருதி ஒன்றைச் செய்யும் பொழுது ஒரு சிலர் அதனால் பாதிக்கப்பட்டால் அரசன் அதுபற்றிக் கவலைப்பட வேண்டியதில்லை. சுயநலமில் லாமல் பிறர் நலங்கருதிச் செய்யப்படும் எத்தொழிலும் துகள் அறு தொழிலேயாகும். ஒரு சிலர் பாதிக்கப்படுவ ரேனும் அப்பாதிப்பை எவ்வளவு குறைக்க முடியுமோ அவ்வளவு குறைக்க வேண்டுமென்பதை அறிவுறுத்த, துகள் அறு தொழில் என்று கவிஞன் கூறுகிறான். துகளை அறுத்தல் என்பதனால் எவ்வளவு முடியுமோ அவ்வளவு குறைவாகப் பாதிப்பு ஏற்படும்படி பார்த்துக் கொள்ள வேண்டும் என்பது பொருளாயிற்று. இதனைப் புரிந்து கொள்ள ஓர் உதாரணத்தைக் காணலாம். வளர்ந்து வரும் நகரத்தில் ஒரு புதிய சாலை போடுவதாக வைத்துக்கொள்வோம். அந்தச் சாலையினால் பல்லாயிர வர் பலகாலம் பயனடைவர். ஆனால் அச்சாலை போடும் வழியில் தனியொருவருடைய வீடு இருந்துவிட்டால் என்ன செய்வது? அவருக்குரிய இழப்பீட்டுத் தொகையைக் கொடுத்துவிட்டு வீட்டை இடிப்பது ஆட்சியாளரின் கடமையாகும். இதனையடுத்து வரும் நான்காவது அடி அதிகாரத்திலுள்ள அனைவருக்கும் அன்றும் இன்றும் என்றும் மிகத் தேவையான ஒரு பண்பாகும். அதிகாரத் தில் உள்ளவர்கள் ஒருவருடன் நெருங்கிப் பழகினால் என்ன தவறு என்று நினைக்கலாம். அவ்வாறு

பழகுபவர்கள் தம்முடைய அந்த நெருக்கத்தைப் பயன் படுத்தித் தம் செல்வாக்கை விலை கூறி விற்பது இன்றும் நாம் காண்கின்ற ஒன்றாகும். இதன் மறுதலையாக யாரையுமே நெருங்கவிடாமல் இருப்பது நலமோ என்றால் அதுவும் தவறேயாகும். நல்லவர்கள், பண்பாளர்கள், மக்களின் குறைகளை எடுத்துச் சொல்பவர்கள் ஆகிய இத் திறத்தார் அரசனுக்கு நலன் செய்பவர்கள் ஆவார்கள். யாரையும் நெருங்க விடவில்லையென்றால் இவர்களால் பெறக் கூடிய நற்பயனும் இல்லாமல் போய்விடும். எனவே தான் அகலாது அணுகாது வாழ்க என்று அரசனுக்கு நெறிமுறை கூறினான் கம்பன். இதற்கடுத்த படியாக வரும் 'தேவரின் தெரிய நிற்றி' என்ற தொடர் சிந்திக்கத் தக்கது. தேவர்கள் தாமாக விரும்பினால் ஏனைய உலகங்களுக்குச் செல்ல முடியுமே தவிர ஏனைய உலகங் களில் உள்ளவர்கள் தேவர்களைச் சென்று அடைய முடியாது. இதனை அனைவரும் அறிவர். ஆகவே தேவரின் தெரிய என்ற சொல்லினால் நீ தேவன் என்பதை ஏனையோர் தெரிந்து கொள்ளும்படி நிற்பாயாக என்கிறான் கவிஞன். இந்த ஒரு பாடலில் ஆட்சிப் பொறுப்பில் இருக்கும் ஒருவனுக்கு தேவையான அத்தனைப் பண்புகளும் கூறப்பெற்றுவிட்டன.

இரண்டாவது பாடலில் (4123) அதிகாரத்தில் உள்ள ஒருவனுக்கு மிக இன்றியமையாது வேண்டப்படும் ஓர் இயல்பு பேசப்படுகிறது. அதிகாரம் பெற்ற உடனேயே அதனைப் பெறமுடியாமல் போனவர்களின் பொறாமை, சூழ்ச்சி முதலியவற்றையுடைய பகைவர்கள் தோன்றி விடுவார்கள். இப் பகைவர்கள் பலதரப்படுபவர்கள் ஆவர். அவர்கள் ஆழ் மனத்திலுள்ள பொறாமை, பகைமை என்பவற்றை மறைத்துக் கொண்டு போலியாக நட்பு பாராட்டுவர். அரசன் கூர்த்த மதியினால் இவர் களுடைய ஆழ் மனத்திலுள்ள பகைமையை அறிந்து கொள்ள வேண்டும். அறிந்துகொண்டதைத் வெளிக்

காட்டாமல் அவர்களிடம் இன்முகங்காட்டி இனிமை யாகப் பேச வேண்டும். அவ்வாறு செய்வதனால் பகைவர்கள் தம் பகைமையை வளர்க்க முடியாமல் செய்துவிடலாம்.

மூன்றாவது பாடலில் (4124) உலக நடைமுறை நியதி ஒன்றைக் கவிஞன் கூறுகிறான். முற்றும் துறந்த முனிவர்களிடம் பிறர் விரும்பக் கூடிய செல்வம் எதுவுமே இல்லையானாலும் அவர்களிடத்துங்கூட பழகுகின்ற வர்கள் நண்பர், பகைவர், நொதுமலர் என்ற மூன்று பிரிவினர் ஆவர். அவர்கள் கதியே இப்படியென்றால் பெருஞ்செல்வத்தைப் பெற்றுள்ள உன்னைச் சுற்றியும் இந்த மூவகையினரும் இருப்பர் என்பதை மறந்து விடாதே, என்று இராகவன் சுக்கிரீவனுக்கு அறிவுறுத்து கிறான். இதற்கடுத்த பாடலில் நண்பர், பகைவர், நொதுமலர் ஆகிய மூவரிடத்தும் ஒத்த மனப்பான்மை யோடு செய்ய வேண்டுவனவற்றைச் செய்ய வேண்டும். தன்னைக் கடிந்து பேசியவர்களையும் இனிய சொற்களால் கவர வேண்டும். எப்பொழுதும் உண்மை பேச வேண்டும். தன்பால் உள்ளவற்றை ஈதலோடு பிறர் பொருள் நச்சாது இருத்தல் வேண்டும் என்பன போன்ற அறங்கள் பேசப்படுகின்றன.

அடுத்த பாடலில் அதிகாரத்திலுள்ளவர்கள் அன்றும் இன்றும் என்றும் தவறாமல் கடைப்பிடிக்க வேண்டிய நியதி ஒன்றைக் கூறுகிறார் அதிகாரம் கையிலிருக்கின்ற காரணத்தால் பிறரைத் தாழ்வாக மதித்துக் கொடுமை செய்து விடாதே. அச்சிறியரால் மாபெருந் துன்பத்தை அடைய நேரிடும் என்பதை மறவாதே! கூனியால் யான் இப்பொழுது அடைந்துள்ள நிலையை அறிவாயாக என்று மனம் பதியுமாறு பேசுகிறான் இராகவன்.

மற்றோர் பாடலில் உன் கீழ் வாழும் மக்கள் உன்னை அரசன் என்று நினைத்து அஞ்சி ஒதுங்காமல் தம்முடைய

தாய் என்று அவர்கள் உன்னைப் போற்றி அன்பு காட்டுமாறு நடந்து கொள்வாயாக. அரசனாதலின் தண்டிக்க வேண்டிய சூழ்நிலை ஏற்படின் அப்பொழுதும் உன் விருப்பு வெறுப்புக்கு இடங்கொடாமல் குற்றத்திற்கு ஏற்ற தண்டனையை வழங்குவாயாக என்ற மிகத் தேவை யான ஒரு பண்பைப் பேசுகிறான் இராகவன். அதிகாரத்தி லுள்ளவர்கள், பிறரைத் தண்டிக்க வேண்டுமென்ற ஆவல் மிகுந்தவர்களாக இருத்தல் கண்கூடு. அது கூடாதென்று மறுக்கிறான் இராகவன்.

இறுதியாக அறத்தின் அடிப்படையில்தான் செல்வம் சேருமே தவிர பாவத்தின் அடிப்படையில் அது சேராது என்றும், மேலோர் வகுத்த சுருதி, யுக்தி, அனுமானம் என்ற மூன்று பிரமாணங்களாலும் விரிவாகக் கூறி முடிக் கிறான். அரசியல் செம்மையாக இருக்க வேண்டுமானால் அரசன் செம்மையாக இருப்பதுடன் அவனை அண்டி வாழும் அமைச்சர் முதலானவர்களும் செம்மை உடைய வர்களாக இருக்க வேண்டும் என்று இராகவன் கூறிய நியதிகள் எக்காலத்திற்கும், முடியாட்சிக் காலமாயினும் குடியாட்சிக் காலமாயினும் பொருந்தும் என்பதை அறிந்து கொள்ள வேண்டும்.

இராகவன் கூற்றாக இந்நெடியவுரை சுக்கிரீவனுக்குச் சொல்லப்பட்டதேனும் கம்பன் கருத்தில் அரசு, அரசியல் என்ற இரண்டும் எவ்வாறு இருக்க வேண்டும் என்று அவன் கூறுகிறான் என்பதை இன்று நாம் அறிந்து கொள்ளச் சிறந்த வாய்ப்பளிக்கின்ற பாடல்கள் ஆகும்.

இவையெல்லாவற்றையும் விட மாபெரும் அரசன் ஒருவனுக்குரிய நீதி ஒன்றைப் பேசுகிறான் கவிஞன். அந்த நீதியை சுக்கிரீவனிடம் சொன்னால் பொருத்தமுடைய தாகாது. எனவே அதற்குரிய நிலைக்களத்தைத் தேடியலைந்த கம்பனுக்குச் சிறந்த இடமொன்று கிடைக் கிறது. சக்கரவர்த்தித் திருமகனாகிய இராமனுக்கு முடி

சூட்ட நாள் குறித்தாயிற்று. பொழுது விடிந்தவுடன் முடி சூட்டப்பட வேண்டும். இந்த நிலையில் இராகவனுக்கு வசிட்டன் அறிவுரை கூறுகிறான். மறுநாட்காலை இராமன் ஒரு பெரிய அரசன் ஆகப்போகிறான்; அதைத் தொடர்ந்து அதிகாரமும் படை பலமும் இராமனைத் தேடி வரப் போகின்றன. இளமைத் துடிப்பில் படை பலத்தைப் பயன்படுத்தி இராகவன் போரில் இறங்கி விடலாமல்லவா. அது கருதி மிக இன்றியமையாத அரசியல் நுணுக்கமொன்றை வசிட்டன் கூறுகிறான்:

**யாரொடும் பகை கொள்ளலன் என்ற பின்**
**போர் ஒடுங்கும், 'புகழ் ஒடுங்காது'** (1419)

ஆழ்ந்த அறிவுடையோர்க்கன்றி ஏனையோரிடம் இதைச் சொல்லிப் பயனில்லை. அதிகாரம் கைக்கு வந்தவுடன் தான் மிகப் பெரியவன் என்றும் ஏனையோரினும் தான் வேறுபட்டவன் என்றும் தன் புகழை எல்லோரும் பாட வேண்டும் என்றும் நினைப்பது மனித இயற்கை. இந்நிலையைத் தவிர்ப்பது என்பது மிகக் கடினமான காரியம். இக்கருத்தை வலியுறுத்தும் வகையில் பிறிதோர் இடத்தில் கம்பநாடன்,

**'அறன் நிரம்பிய அருளுடை அருந்தவர்க்கேனும்**
**பெறல் அருந்திருப் பெற்றபின், சிந்தனை பிறிது ஆம்'**
(1476)

அறவழி நின்று அருளோடு உடிய மனத்தையும் பெற்று மாபெருந் தவங்கள் செய்து முற்றுந் துறந்த முனிவர்களாயினும் எதிர்பாராமல் பெறுதற்கரிய செல்வத்தைப் பெற்றால் அவர்கள் அறிவு மாறிவிடுவது இயல்பு என்று கம்பன் கூறுவதை நினைவில் கொண்டால் வசிட்டன் ஏன் இராமனுக்கு இவ்வாறு உபதேசம் செய்தான் என்பதை விளங்கிக் கொள்ள முடியும்.

மனிதன் புகழுக்கு அடிமையானவன், ஆசைப் பட்டவன். எனவே புகழ் பெறுவதற்குத் தன் ஆற்றலைப் பயன்படுத்தி பிறரை அடக்க முற்படுவது அரசர்க்குரிய இயல்பாகும். இந்த இயல்பை மனத்துக் கொண்ட வசிட்டன் இராகவனுக்குப் பொது அறத்தை உபதேசிப்பது போல இப்பொழுது பேசுகிறான். ஒரு மன்னன் யாருடனும் பகை கொள்ளக் கூடாது என்ற முடிவிற்கு வந்துவிட்டால் அவன் போர் புரிய வேண்டிய இன்றியமையாமை ஏற்படாது. அப்படியானால் அம் மன்னன் பெரும் புகழையடைய வாய்ப்பில்லாமல் போய்விடுமோ என்று அஞ்சுவது இயற்கை. அந்த எண்ணம் தவறானது என்று வசிட்டன் அறிவுறுத்துவ துடன் போரை நிறுத்திவிட்டதனால் புகழ் இல்லாமல் போய்விடும் என்று நினைக்க வேண்டாம். புகழ் வளர்ந்து கொண்டே செல்லும் என்று கூறுகிறான்.

இத்தகைய ஒரு புதுமையான கருத்தை இதற்கு முன்னும் பின்னும் எந்தப் புலவனும், எந்தக் காப்பியப் புலவனும் சொல்லியதில்லையென்பதைத் தமிழ் இலக்கிய வல்லுநர்கள் நன்கு அறிவர். அப்படியானால் கம்பநாடன் இக்கருத்தை எங்கே பெற்றான்? ஒருவன் போரை நிறுத்திய பின் அவனுக்குப் புகழ் வளர்ந்தது என்றால் அவன் யார்? என்ற வினா தோன்றுவது இயல்பு. உலக வரலாற்றிலேயே போரை நிறுத்திப் புகழின் உச்சநிலையை அடைந்தவன் ஒரேயொருவன்தான் உண்டு. அப் பெரியவன் தோன்றியதும் இந்த இந்திய மண்ணில்தான். அவனே அசோகச் சக்கரவர்த்தி என்பதை உலகம் நன்கறியும். அலெக்சான்டர், செங்கிஷ்கான் போன்ற வர்கள் புகழ்வெறி கொண்டு மாபெரும் போர் செய்து புகழையடைந்ததாக இறுமாந்து நின்றனர். ஆனால் அவர்கள் மடிந்த உடனேயே அவர்கள் அடைந்த புகழும் மடிந்துவிட்டது. இந்த 2500 ஆண்டுகளாகப் போரை நிறுத்தி அதனால் மங்காத புகழையடைந்த ஒருவன்

அசோகனேயாவான். இந்திய மண்ணின் வரலாற்றை நன்கறிந்த கம்பநாடன் அசோகனை மனத்திற்கொண்டு இந்த இரண்டு வரிகளையும் பாடினான் என்று கொள்வது தவறில்லை. உலக வரலாற்றில் போரை நிறுத்திப் புகழ் கொண்டவன் அசோகன் ஒருவனேயாவது போல உலக இலக்கிய வரலாற்றில் 'போரொடுங்கும் புகழ் ஒடுங்காது' என்று பாடியவன் கம்பன் ஒருவனேயாவான்.

கம்பனுடைய இராமகாதையில் கோசலம், கிட்கிந்தை, இலங்கை என்ற மூன்று நாடுகள் பேசப்படுகின்றன. இவற்றை முறையே தசரதன், வாலி, இராவணன் என்போர் ஆட்சி செய்கின்றனர். இம்மூவரின் ஆட்சியின் கீழும் அவர்களால் ஆட்சி செய்யப்பெற்ற குடிமக்கள் எவ்வாறு இருந்தனர் என்பதைக் கவிஞன் சுட்டிச் செல்கிறான். கோசலத்தைப் பொறுத்தமட்டில் மன்ன னாகிய தசரதன் 'அறிஞன் ஓம்பும் ஓர் செய்' எனக் குடிமக்களைக் காக்கின்றான் ஆதலால் கோசல மக்கள் மகிழ்ச்சியுடன் வாழ்ந்திருப்பார்கள் என்பதில் ஐயமில்லை. நாட்டுச் சிறப்பைப் பாடுமிடத்து இதை ஓரளவு விரிவாகவே கம்பன் பாடுகிறான். கிட்கிந்தையைப் பொறுத்தமட்டில் மாபெரும் வல்லமை படைத்தவனும் எல்லையற்ற கடவுள் பக்தியுடையவனும் இராவணனை யும் வெல்லும் ஆற்றல் படைத்தவனாகிய வாலியின் ஆட்சியில் அவனுடைய குடிமக்கள் எவ்வாறு இருந்திருப் பார்கள் என்பதைக் கவிஞன் எடுத்துக் கூறவில்லை. ஆனால் வாலியைக் கொன்ற பிறகு சுக்கிரீவனுக்குப் பட்டங்கட்டி வேண்டுமான அறவுரைகள் கூறி அவனைக் கிட்கிந்தைக்கு அனுப்புகிறான். அவன் சென்ற பிறகு சுக்கிரீவனின் அமைச்சனாகிய அனுமனை அருகில் அழைத்து மிக நுணுக்கமான ஓர் அரசியல் விவகாரத்தை அனுமனிடம் பேசுகிறான் இராகவன்.

**'நிரம்பினான் ஒருவன் காத்த நிறை அரசு இறுதிநின்ற
வரம்பு இலாததனை, மற்றும் ஓர் தலைமகன் வலிதின் கொண்டால்
அரும்புவ, நலனும் தீங்கும்; ஆகலின், ஐய! நின்போல்
பெரும்பொறை அறிவினோரால், நிலையினைப் பெறுவது அம்மா!**

இப்பாடலின் முதலடி சிந்திப்பதற்குரியது. நிரம்பினான் என்ற சொல்லினால் வாலி அனைத்து நற்பண்புகளும் நிரம்பப் பெற்றவன் என்பதை இராகவனே ஏற்றுக்கொண்டு பேசுகிறான். ஒருவன் என்ற சொல்லை யாரோ ஒருவன் என்ற பொதுப் பெயர் என்று கொள்ளாமல் ஒப்பற்றவன் என்ற சிறப்புப் பொருளை இங்கே கொள்ள வேண்டும். காரணம் அடுத்து வருகின்ற நிறையரசு என்ற சொல் இவ்வாறு பொருள் கொள்ளா விட்டால் பொருட்சிறப்பு அற்றதாகிவிடும். நிறையரசு என்றால் மக்கள் வளம் உட்பட அனைத்து வளங்களும் நிரம்பிய அரசு என்பதே பொருளாகும். நிறையரசு என்பது வினைத்தொகையாதலின் இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்ற மூன்று காலங்கட்கும் உரியதாய் கிட்கிந்தையின் வளத்தை உணர்த்தும் சொல்லாய் அமைகிறது. பன்னெடுங்காலமாகக் கிட்கிந்தையை ஆட்சி செய்த வாலி சில மணி நேரங்களுக்கு முன்னர்த்தான் வீடுபேற்றை யடைந்தான். அவனால் ஆட்சி செய்யப் பெற்ற நாட்டை நிறையரசு என்று இராமனே ஒத்துக் கொள்கிறான். அன்றியும் தன்னால் கொல்லப்பட்ட வாலியைச் சகல நற்பண்புகளும் நிறைந்தவனும் ஒப்பற்றவனும் என்ற பொருளில் 'நிரம்பினான் ஒருவன் காத்த நிறையரசு' என்று பேசுகிறான் என்றால் வாலியின் ஆட்சிச் சிறப்பை இராமனே ஏற்றுக்கொண்டு புகழ்கிறான் என்பது வெளிப்படை. இப்பாடலுக்கு இவ்வாறு பொருள் கொள்ள விரும்பாமல் இது ஏதோ ஒரு பொதுக்கருத்தை

எடுத்துக் கூறியதாகும் என்று பலரும் உரை கண்டனர். உண்மையில் வாலியையும் சுக்கிரீவனையும் ஒப்பிட்டுப் பார்த்த இராகவன் வாலியின் சிறப்புக்களுக்கு எதிரே சுக்கிரீவன் இருக்கமாட்டான் என்பதை உணர்கிறான். தான் பழகிய ஒருசில நாட்களுக்குள்ளாகவே இந்த வேறு பாட்டையறிய முடிகிறது என்றால் வாலியின் ஆட்சியில் மகிழ்ச்சியோடு பலகாலம் வாழ்ந்த மக்கள் சுக்கிரீவன் ஆட்சியை ஏற்றுக் கொள்ளுவது கடினம் என்பதை அறிகிறான் இராகவன். நுண்மாண் நுழை புலம் உடைய அனுமனிடத்தில் அவனுடைய தலைவனாகிய சுக்கிரீவ னுடைய குறைபாடுகளை நேரிடையாக எடுத்துச் சொல்லாமல் வாலியைப் புகழ்வதன் மூலம் சுக்கிரீவனின் குறைபாட்டை அனுமன் அறிந்து கொள்ளுமாறு செய்கிறான். நிறையரசில் வாழ்ந்த மக்கள், அவ்வரசை வலிதில் பற்றிக்கொண்ட சுக்கிரீவன் அரசை பழைய அரசோடு ஒப்பிட்டுப் பாராமல் இரார். எனவே அவர்கள் மனத்தில் வெறுப்புணர்ச்சி தோன்றாமல் உன் அரசனாகிய சுக்கிரீவனைக் காப்பது அமைச்சனாகிய உன்னுடைய கடமை என்ற அறவுரையை அனுமனுக்குக் கூறுகிறான் இராகவன். குரங்குகள் வாழும் நாடாயினும், அந்த நாட்டை ஒரு குரக்கரசன் ஆட்சி செய்தான் என்றாலும் அவனுடைய ஆட்சியை நிறையரசு என்றும் அவனை நிரம்பினான் ஒருவன் என்றும் சக்கரவர்த்தித் திருமகனைக் கூற வைத்து ஒரேவரியில் கிட்கிந்தை அரசியலை நமக்கு உணர்த்திவிடுகிறான் கம்பன்.

மூன்றாவதாக உள்ள இலங்கையரசு அரசியல், மக்கள் ஆகியவை பற்றி மிக விரிவாகப் பாடுகிறான் கவிஞன். அப்பகுதி முழுவதையும் இங்கு எடுத்துக் கூற இடமில்லையென்றாலும் ஒரே ஒரு பகுதியை மட்டும் சிந்திப்பது நலம் பயக்கும். 'இந்திரப் பெரும்பதம்' என்று கும்பகர்ணனால் குறிக்கப்படும் இலங்கையரசில் மக்கள்

எப்படி வாழ்ந்தார்கள் என்பதை இரண்டே அடிகளில் கவிஞன் கூறுகிறான். அந்த இரண்டு அடிகளும் கவிஞன் கூற்றாக அல்லாமல் அனுமன் கூற்றாக அமைவது சாலச் சிறந்ததாகும். இராவணனைப் பற்றி மிக மிக மோசமான எண்ணங்கொண்டவன் அனுமன். இராகவனின் தூதனும் ஆவான். அத்தகைய மனப்பான்மையுடைய அனுமன் முதன்முதலாக இலங்கையையும் அதன் மக்களையும் பார்த்து வியந்து இரண்டு அடிகளில் இரண்டு பாராட்டுக் களைத் தெரிவிக்கிறான். இலங்கை நகர் முழுவதையும் ஒரு கண்ணோட்டமிட்ட அனுமன் இந்த நகரத்தோடு தேவருலகத்தை ஒப்பிட்டால் தேவருலகம் வெறுக்கத் தகுந்த நரகலோகம் ஆகிவிடும் என்ற பொருளில்,

**'நரகம் ஒக்குமால் நல்நெடும் துறக்கம்இந் நகர்க்கு'** *(4848)*

என்று பேசுகிறான். அடுத்தபடியாக அங்கு வாழ்ந்த மக்களைப் பற்றிப் பேசத் தொடங்கிய அனுமன்,

**'அளிக்குந் தேறலுண்டு ஆடுநர் பாடுநர் ஆகிக்**
**களிக்கின்றார் அலால் கவல்கின்றார் ஒருவரைக் காணேன்'**

என்று பேசுகிறான். மேலோட்டமாகப் பார்க்கும் பொழுது இலங்கை மக்கள் அனைவரும் களிப்புடன் வாழ்ந்தனர்; கவலைப்படுபவர் ஒருவர் கூட இல்லை என்ற பொருளைத் தருகிறது, இவ்வடிகள். இராவணனைப் பொறுத்தமட்டில் பிறர் மனை நயத்தல் என்ற குற்றம் புரிந்தவனாயினும் அவனுடைய நாட்டு மக்களைக் காப்பதில் கண்ணும் கருத்துமாக இருந்தான் என்பதை இவ்வடிகள் உணர்த்தும். ஆழ்ந்து நோக்கினால் களிக்கின்றார் என்ற சொல்லுக்கு வேறோர் பொருள் இருப்பதையும் அறிய முடியும். கம்பநாடன் காலத்தில் களித்தல் என்ற சொல்லிற்கு மகிழ்தல் என்ற

பொருளில்லை. குடித்துவிட்டுத் தம்மை மறந்து இருப்பவர்களையே களிப்புடன் இருப்பவர்கள் என்று சொல்வது மரபு. இலங்கையிலுள்ளவர்கள் தம் அரசனின் அடாத செயலைக் கண்டு அதைத் தட்டிக் கேட்க முடியாமையான் மனத்தில் பெருங்கவலை கொண்டு அக்கவலையை மறக்கத் தேறல் மாந்திக் களித்தார்கள் என்ற பொருளும் தொனிக்கும்படியாகக் கவிஞன் பாடியுள்ளான்.

அரசியலைப் பற்றி விரிவாகப் பாடுவது கம்பனின் நோக்கமன்று என்றாலும் உலக வாழ்க்கையில் மிகப் பெரிய உறுப்பாக இருக்கின்ற அரசு, அரசியல் என்பவைப் பற்றி அவன் என்ன நினைந்தான் என்பதையறிய அவனுடைய காப்பியம் உதவுகிறது.



